**தாழ்மையுள்ளவர்களுக்கும், ஆண்டவரிடம் அச்சம்**
**உடையவர்களுக்கும் கிடைக்கும் பயன் செல்வமும்,**
**மேன்மையும், நீடித்த ஆயுளுமாகும்**
*(நீதிமொழி.22:4)*

# மேன்மை அடைய

விரும்பினால். . .

**சகோ. ஜான்சன் விக்டர்**

**சாந்தோம், சென்னை.**

**2025**

(தனிச் சுற்றுக்கு மட்டும்)

**புத்தகம் தேவைப்படுவோர் தொடர்புக்கு:**

| | | |
|---|---|---|
| **சென்னை** | **:** | **98405 22710** |
| **தூத்துக்குடி** | **:** | **98414 26325** |

# உள்ளடக்கம்

# முன்னுரை

**''பெருஞ்சுமை சுமந்து சோர்ந்திருப்பவர்களே, நீங்கள் எல்லாரும் என்னிடம் வாருங்கள், நான் உங்களுக்கு இளைப் பாறுதல் தருவேன்''** (மத்தேயு 11:28) என்று ஆண்டவராகிய இயேசு கிறீஸ்து அழைக்கிறார். இளைப்பாறுதலை நான் உங்க ளுக்குத் தருவேன் என்று ஆண்டவர் நமக்கு வாக்குப் பண்ணு கிறார். இன்றைக்கு நம்முடைய வாழ்க்கையில் இந்த சமாதானம், இளைப்பாறுதல், மன அமைதி, நிம்மதி இருக் கிறதா? இல்லையா? கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்!

ஏதோ சில நேரங்களில், நம் வாழ்க்கையில் சமாதானம் இருக்கிறது. ஏதாவது ஒரு காரியத்தை மனதில் நினைத்து நாம் ஜெபம் செய்கிறோம். அந்தக் காரியம் நடந்த உடனே நமது மனதில் ஒரு சமாதானம். ஒரு வீடு கட்ட நினைக்கிறோம்; அந்த வீட்டைக் கட்டி முடித்து விட்டோம்; மனதில் ஒரு நிம்மதி. பிள்ளைகளுக்குத் திருமணம் செய்ய வேண்டும் என்று நினைக்கிறோம்; திருமணம் செய்து முடித்து விட்டோம்; மனதில் ஒரு சமாதானம். நாம் எதிர்பார்க்கிற ஒரு டிரான்ஸ்பர் கிடைத்தால் நமக்கு ஒரு சமாதானம். ஆனால் இந்த சமாதானம் எப்பொழுதுமே நிரந்தரமானதாக இருக்கிறதா? அல்லது சிறிது காலத்தில் போய்விடுகிறதா? அப்படி நிரந்தரமாக இல்லை என்றால், இயேசு தருகிறேன் என்று சொன்ன சமாதானம் இதுதானா? இப்படிப்பட்ட தற்காலிகமான ஒரு சமாதானத் தைத் தருவதற்குத்தான், எல்லோரும் என்னிடம் வாருங்கள் என்று ஆண்டவர் அழைக்கிறாரா? ஆண்டவர் சொன்னது இந்த சமாதானத்தை இல்லை. வேறு ஒரு சமாதானத்தை. அதாவது, **என் சமாதானத்தை நான் உங்களுக்குத் தருகிறேன்** என்று சொல்கிறார்.

யோவான் 14:27ல், **''அமைதியை உங்களுக்கு விட்டுச் செல் கிறேன்; என் அமைதியையே உங்களுக்கு அளிக்கிறேன். நான் உங்களுக்குத் தரும் அமைதி உலகம் தரும் அமைதி போன்றது அல்ல''** என்று ஆண்டவர் சொல்கிறார். என் சமாதானத்தை,

என் அமைதியை உங்களுக்குத் தருகிறேன் என்று சொல்கிறார். அதோடு மட்டுமில்லாமல், நான் கொடுக்கிற அமைதி உலகம் தருகிற அமைதி போன்றது அல்ல என்று சொல்கிறார். ஏனென் றால், உலகம் ஒரு அமைதியை, சமாதானத்தைக் கொடுக்கிறது. அது நிரந்தரமான சமாதானம் இல்லை. அது வருகிறது, போய் விடுகிறது. இயேசு நமக்குத் தருகிறேன் என்று சொல்கிற சமாதானம், உலகம் தர முடியாத நிரந்தரமான சமாதானம். இன்றைக்கு நம் உள்ளத்தில் அப்படிப்பட்ட சமாதானம் இருக்கிறதா? இல்லையென்றால், நாம் இயேசு தருகிற அந்த சமாதானத்தைப் பெற்றுக்கொள்ளவில்லை என்றுதானே பொருள். அதைப் பெற்றுக்கொண்டோம் என்றால் நிச்சயமாக அந்த சமாதானம் நிரந்தரமானதாக இருக்கும்.

திருத்தூதர் பணிகள் 12ஆம் அதிகாரத்தில் இப்படி வாசிக் கிறோம். ஏரோது, பேதுருவைக் கைது செய்து, சிறைச்சாலை யில் வைத்திருந்தான். ஏற்கெனவே யாக்கோபை வாளால் கொன்றுவிட்டான். அது யூதர்களுக்குப் பிடித்திருந்தது. அதனால் திருச்சபையின் தலைவராக இருந்த பேதுருவையும் கொன்று விட்டால், யூதர்களுக்கு இன்னும் அது சந்தோஷத் தைக் கொடுக்கும் என்று அவன் நினைத்தான். அடுத்த நாள் பேதுருவுக்கு விசாரணை. பின் மரண தண்டனை. இப்படிப் பட்ட ஒரு சூழ்நிலையில், தி.ப. 12:6ல் என்ன வாசிக்கிறோம்? ஏரோது பேதுருவின் வழக்கைக் கேட்பதற்கு முந்தின இரவில், அவர் படைவீரர் இருவருக்கு நடுவே, இரு சங்கிலிகளால் கட்டப்பட்டுத் தூங்கிக்கொண்டிருந்தார். எந்த அளவுக்கு நிம்மதியாக உறங்கிக்கொண்டிருந்தார் என்றால், வானதூதர் வந்து, அவரை எழுப்பி, உடைகளைப் போட்டுக்கொள், இடுப் பில் இடைவாரைக் கட்டிக்கொள் என்று சொல்கிறார். அந்த இரும்புக் கதவு அவர்களுக்குத் தானாகவே திறக்கிறது. அவர்கள் வெளியே வந்த பிறகு, ஒரு குறிப்பிட்ட இடத்தில் வானதூதர் அவரை விட்டுவிட்டுச் சென்று விடுகிறார். அப்பொழுதுதான் பேதுருவுக்குத் தன்னுணர்வு வருகிறது. அது வரைக்கும் அவர் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கிறதைப் போலத்தான் இருக்கிறார்.

இப்படிப்பட்ட ஒரு சூழ்நிலை நம் வாழ்க்கையில் வந்தால், நம்மால் இப்படி நிம்மதியாக உறங்க முடியுமா? ஒருவேளை டாக்டர் உங்களிடம், உங்களுக்கு வந்திருக்கிற இந்தக் கட்டி கேன்சர் கட்டி போல இருக்கிறது. டெஸ்ட் எடுத்துப் பார்ப் போம் என்று சொல்லி விட்டார் என்றால், உங்களால் நிம்மதி யாக இருக்க முடியுமா? உறங்க முடியுமா? சிந்தித்துப் பாருங்கள். பேதுருவால் எப்படி நிம்மதியாக உறங்க முடிந்தது. காரணம், **உலகம் தர முடியாத அந்த சமாதானத்தை அவர் இயேசுவிடமிருந்து பெற்றுக்கொண்டார்.**

இயேசு தருகிற இந்த சமாதானத்தை நாம் எப்படி பெற்றுக் கொள்ள முடியும்? மத்தேயு 11:29ல் இயேசு, "நான் கனிவும், மனத்தாழ்மையும் உடையவன். ஆகவே என் நுகத்தை உங்கள் மேல் ஏற்றுக்கொண்டு **என்னிடத்தில் கற்றுக்கொள்ளுங்கள். அப்பொழுது உங்கள் உள்ளத்திற்கு இளைப்பாறுதல் கிடைக்கும்**" என்று சொல்கிறார். அப்பொழுது கிடைக்கும் என்றால் என்ன அர்த்தம்? கற்றுக்கொள்ள வேண்டிய காரியங்களைக் கற்றுக் கொள்கிற பொழுது கிடைக்கும் என்று அர்த்தம்.

இயேசு, தம்மிடத்தில் கற்றுக்கொள்ளுங்கள் என்று இரண்டே இரண்டு காரியங்களைத்தான் சொல்லி இருக் கிறார். ஒன்று மனத்தாழ்மை; இரண்டாவது சாந்தம். பொது மொழிபெயர்ப்பில் கனிவு என்று போடப்பட்டிருக்கிறது. இவற்றைக் கற்றுக்கொள்கிற பொழுதுதான், நம் உள்ளத்தில், உலகம் தர முடியாத அந்த அமைதி இருக்கும். இன்றைக்கு எங்கு பார்த்தாலும் இப்படிப்பட்ட அமைதி இல்லை. குடும்பங்களில், பங்குகளில், துறவற மடங்களில் எங்கு போனாலும், இப்படிப்பட்ட அமைதியைக் காண முடிவ தில்லை. என்ன காரணம்? இயேசு, என்னிடத்தில் கற்றுக் கொள்ளுங்கள் என்று சொன்ன அந்த இரண்டு காரியங்களை இன்னும் கற்றுக்கொள்ளவில்லை. மனத்தாழ்மையையும், சாந்தத்தையும் கற்றுக்கொண்டால் தான் மன அமைதி யோடும், மன மகிழ்ச்சியோடும் வாழ முடியும்.

--------------

# 01. திரும்பத் திரும்ப விழுதல்

*ஆண்டவர் முன் உங்களைத் தாழ்த்துங்கள்; அவர் உங்களை உயர்த்துவார் (யாக்கோபு. 4:10). இன்றைக்கு நிறைய சிக்கல்கள், வாழ்க்கையில் நாம் சந்திக்கிற பிரச்சினைகள், போராட்டங்கள், இவற்றுக்கெல்லாம் காரணம், நம்மைத் தாழ்த்த முடியாததுதான்.*

*தாழ்மைக்கு எதிராக இருக்கக் கூடியது ஆணவம், அகந்தை. ஒரு மனிதனுக்கு அழிவு வருவதற்கு முன்பாகவே அவனுக்கு ஆணவம், அகந்தை வந்து விடும் என்று விவிலியத்தில் வாசிக்கிறோம் (நீ.மொ. 18:12). அந்த ஆணவம்தான் மனிதனுக்கு அழிவைக் கொண்டு வருகிறது. ஆனால் தாழ்ச்சியோ அந்த மனிதனை உயர்த்துகிறது.*

*தாழ்மை என்று சொல்லுகிறபோது, இரண்டு விதமாகக் குறிப்பிடலாம். ஒன்று உண்மையான தாழ்மை. இன்னொன்று போலியான தாழ்மை. உண்மையான தாழ்மை என்றால் இருதயத்தில் தாழ்மை. பலர் அமைதியான வார்த்தைகள் பேசி விட்டாலோ அல்லது பணிந்து, குனிந்து எழுந்துவிட்டாலோ அல்லது ஏழ்மையான உடை அணிந்தாலோ, அது தாழ்மை என்று நினைக்கிறார்கள். அதை தாழ்மை என்று சொல்ல முடியாது. தேவனோ இருதயத்தில் இருக்கக் கூடிய தாழ்மையைப் பார்க்கிறார். ஒரு மனிதனின் மனதில் இருக்கக்கூடிய தாழ்மையைப் பார்க்கிறார்.*

*லூக்கா முதலாவது அதிகாரத்திலே அன்னை மரியாளின் பாடலில்,* **“தாழ்நிலையில் இருந்த தம் அடியவரைக் கடைக்கண் நோக்கினார்** *1:48);* **உள்ளத்தில் செருக்குற்றோரை சிதறடித்தார்”** *(1:51) என்று வருகிறது.*

**“மனித உள்ளத்திற்காகக் கடவுள் பேராவலோடு ஏங்குகிறார். அதற்கு அவர் அளிக்கும் அருளோ மேலானது” என்று மறைநூல் சொல்வது வீணென நினைக்கிறீர்களா? ஆகவே, “செருக்குற்றோரை அவர் இகழ்ச்சியுடன் நோக்குகிறார்; தாழ்நிலையில்**

**உள்ளவர்களுக்கோ கருணை காட்டுவார்"** (யாக்கோபு. 4:6). தாழ்நிலையில் உள்ளவர்களுக்குக் கருணை காட்டுகிறார், உதவி செய்கிறார். ஆனால் பெருமை உள்ளவர்களையோ கடவுள் எதிர்த்து நிற்கிறார், அவர்களைக் கடவுள் இகழ்ச்சியோடு நோக்குகிறார்.

இன்றைக்கு ஒரு மனிதனுடைய வாழ்க்கையில் உயர்வும், தாழ்வும் அவன் உள்ளத்தில் இருக்கக் கூடிய தாழ்மை அல்லது பெருமையில்தான் அடங்கி இருக்கிறது. அந்தப் பெருமை யினால்தான் ஒரு மனிதன் தாழ்த்தப்படுகிறான்.

ஒரு மனிதன் பரிசுத்தமாக இருக்க வேண்டும் - பாவத்தில் விழக்கூடாது - என்றால், அவனுக்குத் தாழ்மை வேண்டும். எப்போது அவன் தாழ்மையை இழக்கிறானோ, அப்போது கடவுளுடைய அருள் அவனை விட்டுப் போய்விடுகிறது. அப்பொழுதுதான் அவன் விழுந்து போகிறான். தாழ்மையோடு இருக்கிற வரைக்கும் ஆண்டவருடைய கிருபை அவனைத் தாங்குகிறது.

நம்மில் பலர் அடிக்கடி பாவத்தில் விழுகிறார்கள். திரும்பத் திரும்ப செய்த தவறுகளையே செய்கிறார்கள். அதற்கு ஒரே ஒரு காரணம், அது அவர்களுடைய பெருமைதான். பெருமைதான் அந்த மனிதனை திரும்பத் திரும்ப பாவத்தில் விழ வைக்கிறது. குடிகாரர்கள் தங்கள் குடியை விட்டுத் திருந்தி இருப்பார்கள். சில மாதங்கள் குடிக்காமலே இருப்பார்கள். கொஞ்ச நாள் கழித்து அவர்களுக்கு ஒரு பெருமை வந்து விடும். நான்தான் குடிக்க வில்லையே, நான் ஏன் ஜெபத்திற்கு செல்ல வேண்டும் என்று கேட்பார்கள். இப்படிச் சொல்ல ஆரம்பித்த பிறகு ஒரு மாதம் கூடத் தாக்குப்பிடிக்க மாட்டார்கள்; திரும்பவும் குடிக்கப் போய் விடுவார்கள்.

பின்னர் நிலைமை மோசமானவுடன் திருந்த வேண்டும் என்று மீண்டும் ஜெபத்திற்கு வருவார்கள். எதனால் அவர்கள் விழுகிறார்கள்? அது பலவீனம் அல்ல, பெருமை. இரண்டு

நாள் பாவம் செய்யவில்லை என்றால், நான் பரிசுத்தமாக இருக்கிறேன் என்ற பெருமை வந்து விடுகிறது. இந்தப் பெருமை வந்த உடனே கடவுளுடைய கரம் அவனை விட்டு விலகுகிறது. ஆண்டவரின் அருள், அந்தக் கிருபை அவனிடம் இருந்து எடுக்கப்படுகிறது. ஆண்டவர் யாருக்கு கிருபையைக் கொடுக்கிறார்? தாழ்மை உள்ளவர்களுக்கு அந்தக் கிருபையைக் கொடுக்கிறார். ஒரு மாதம் நீங்கள் பாவம் இல்லாமல் இருக்கலாம். எந்தப் பாவமும் உங்களை அணுகாமல் இருக்கலாம். ஆனால் அடுத்த நாளைக்கு நீங்கள் பரிசுத்தமாக வாழ கடவுளுடைய கிருபை உங்களுக்குத் தேவை.

எந்த மனிதனும் தன்னுடைய சொந்த பெலத்தினால் பரிசுத்தமாக வாழ முடியாது. தேவனுடைய கிருபையினால் தான் பரிசுத்தத்தைப் பெற முடியும். தேவனுடைய கிருபை யைப் பெற்றுக்கொள்வதற்குத்தான் தாழ்மை தேவைப்படு கிறது. ஆண்டவருடைய கிருபை ஒரு மனிதனைத் தாங்குகிற வரைக்கும்தான் அந்த மனிதனால் பாவத்தில் விழாமல் தாக்குப் பிடிக்க முடியும். தேவனுடைய கிருபை தாங்காவிட்டால், எந்த மனிதனும் பாவத்தில் விழுந்து விடுவான். அதுதான் மனிதனுடைய சுபாவம். எப்போது கிருபை அவனை விட்டுப் போகிறது? பெருமை நம்முள் வந்த உடனே.

அதனால் இயேசு சொல்கிறார்: **“நானே திராட்சை செடி; நீங்கள் அதன் கொடிகள். ஒருவன் என்னுடனும் நான் அவருடனும் இணைந்திருந்தால், அவர் மிகுந்த கனி தருவார். என்னை விட்டுப் பிரிந்து உங்களால் எதுவும் செய்ய முடியாது”** (யோவான் 15:5). இயேசுவை விட்டுப் பிரிந்து உங்களால் எதுவும் செய்ய இயலாது. ஒரு மனிதனும் இயேசு இல்லாமல் பரிசுத்தம் அடைய முடியாது. ஒரு நாள் பரிசுத்தமாக இருக்க வேண்டுமானாலும் ஒரு மாதம் பரிசுத்தமாக இருக்க வேண்டுமானாலும், ஆண்டவருடைய உதவி தேவை. ஒவ்வொரு நாளும், “ஆண்டவரே! நேற்றைக்கு என்னைப் பாதுகாத்தீர். இன்றைக்கும் எனக்கு உதவி செய்யும்!

உம்முடைய தயவினால் தான் பாவத்தில் இருந்து வெளியே வர முடியும்" என்று சொல்லும்போது, ஆண்டவர் ஒவ்வொரு நாளும் நமக்கு பெலத்தைக் கொடுக்கிறார்.

"நான் ஒரு வாரம் பாவம் செய்யவில்லை" என்று நீங்கள் சொன்னால், பிசாசு அந்த இடத்துக்கு வந்து விடுவான். பாவம் செய்யாமல் இருப்பது கடவுள் கொடுக்கக் கூடிய கிருபை. சிலர் ஒரு மாதம் டீவி பார்க்காமல் இருந்தவுடன் பெருமை வந்து விடுகிறது. பெருமை வந்தவுடன் பிசாசு பக்கத்தில் வந்து நிற்கிறான். நீங்கள் டீவி பார்க்கவில்லை என்றால், அது கடவுள் கொடுத்த கிருபை. இன்னும் சிலர் நான்கு நாட்கள் பொய் சொல்லவில்லை என்றால், உடனே பெருமைப்படுகிறார்கள். கடவுள் உங்களுக்கு அந்த கிருபையை கொடுத்தால்தான் நீங்கள் பொய் சொல்லுவதிலிருந்து வெளியே வர முடியும். நாமாக எதையும் செய்ய முடியாது. தேவனுடைய கிருபை நம்மைத் தாங்காமல், பாவத்தில் இருந்து நாம் வெளியே வர முடியாது.

ஒவ்வொரு நாளும் அவருடைய கிருபை நமக்குத் தேவை. அதனால் தான் காலைதோறும் தேவனுடைய கிருபை புதிதாக இருக்கிறது (புலம்.3:23). ஏன் காலைதோறும் புதிதாக இருக்கிறது? நேற்று இருந்த மாதிரி இன்றைக்கு இல்லை. நேற்று சந்தித்த அதே ஆட்களை இன்று சந்திக்கப் போகிறது இல்லை. நேற்று இருந்த அதே சூழ்நிலைகள் இன்று இருக்கப் போவதில்லை. நேற்று போன இடத்திற்கு இன்று போகப் போவதில்லை. ஒவ்வொரு நாளும் புது ஆட்களைச் சந்திக் கிறோம். புதிய இடங்களுக்குச் செல்கிறோம். சூழ்நிலைகள் புதிதாய் இருக்கின்றன. காலச் சூழல் மாறுகிறது. அந்தந்த நாளுக்கு தேவன் புதிய கிருபையைத் தந்து நம்மைத் தாங்கு கிறார். ஆண்டவரிடத்தில் இருந்து கிருபையைப் பெற்றுக் கொள்ளாமல் நாம் பரிசுத்தமாக ஒருபோதும் வாழ முடியாது.

ஒவ்வொரு நாளும் கடவுளுக்கு முன் யார் தங்களைத்

தாழ்த்துகிறார்களோ, அவர்களைத் தேவன் உயர்த்துகிறார். தாழ்த்த முடியாதவர்கள் விழுந்து போகிறார்கள், அல்லது தாழ்த் தப்படுகிறார்கள். தாழ்வு என்று சொல்லும்போது, முதலாவது அவர்கள் பாவத்தில் விழுகிறார்கள். ஒரு மனிதனின் வாழ்வில் அவன் தாழ்த்தப்படுவது எங்கே? பாவத்தில். பாவம் மனிதனைக் குறுகிப் போகப் பண்ணுகிறது. தலை நிமிர்ந்து நிற்க முடியாமல் செய்கிறது. மனிதன் தாழ்த்தப்படுவதன் அர்த்தம், அவனது வாழ்வில் வரக்கூடிய பாவம் அல்லது விட்ட பாவத்தை திரும்பப் போய் செய்வது, இகழ்ச்சிக்கு உள்ளாவது, தேவன் கொடுத்த அந்தப் பரிசுத்தத்தில் வாழ முடியாமல் போவதுதான். பாவம் ஒரு அவமானத்தின் அடையாளம். பாவம் செய்கிறவர்கள் தலை நிமிர்ந்து நிற்க முடியாது. பாவம் செய்கிற இருதயத்திலே அவனது மனமே அவனைக் குத்தும். அவனது மனது குற்ற மனசாட்சியாக அவனுக்குள் இருந்து அவனை வாதிக்கும்.

யூதாஸுக்கு அதுதான் நடந்தது. அவன் பண ஆசையால் இயேசுவைக் காட்டிக் கொடுத்தான். அவன் எதிர்பார்த்த பணம் கையில் வந்தது. ஆனால் அவன் மனசாட்சி அவனை வாட்டி வதைத்து, புலம்பினான். அந்தப் பணத்தை வைத்துக் கொண்டு அவனால் நிம்மதியாக இருக்க முடியவில்லை. இயேசுவின் இரத்தத்தால் உண்டான பணம். மாசற்ற இரத்தத்தைக் காட்டிக் கொடுத்ததால் வந்த பணம். அவன் அதைக் கொண்டு போய் ஆலயத்தில் தூக்கி எறிந்தான். அந்தப் பணம் இருந்த வரை அது அவனை வாட்டி வதைத்தது. மாசற்ற இரத்தத்தைக் காட்டிக் கொடுத்தேனே என்று அவன் மனசாட்சி அவனை வாதித்தது (மத். 27:3-4).

குற்றம் - பாவம் - ஒரு மனிதனுடைய இருதயத்தைக் குத்திக்கொண்டே இருக்கும். குற்ற மனசாட்சி ஒருவனை வாதித்துக்கொண்டே இருக்கும். ஆனால் ஆண்டவர் இயேசு தம்முடைய இரத்தத்தைச் சிந்தி நம்முடைய மனசாட்சியைக் கழுவித் தூய்மைப்படுத்துகிறார் (எபிரே. 9:14).

# 02. அன்னை மரியாவின் முன்மாதிரிகை

*தாழ்ச்சி உள்ளவர்களைத் தேவன் தூக்கி நிறுத்துகிறார். யார் தேவனுக்கு முன்பாகத் தங்களைத் தாழ்த்துகிறார்களோ, அவர்களைத் தேவன் உயர்த்துகிறார். இதுதான் அன்னை மரியாளுக்கு நிகழ்ந்தது. அவர்கள் தேவனுக்கு முன்பாகத் தன்னை எப்படித் தாழ்த்தினார்கள்? வானதூதர் வந்து அவர் களுக்கு ஒரு காரியத்தைச் சொல்கிறார்: "உமக்கு ஒரு மகன் பிறப்பார்." அது ஒரு மகிழ்ச்சியான செய்தி. "அவர் கடவு ளுடைய மகன் எனப்படுவார்." இன்னும் மகிழ்ச்சியான ஒரு காரியம். அதோடு அந்த வானதூதர் நிறுத்தவில்லை. ஆனால் அவர்கள் தன்னுடைய ஒரே மகனை உலகத்தின் மீட்புக்காக சிலுவையில் பலி கொடுக்க வேண்டும். அன்னையும் கூட இருந்து அந்தப் பலியில் பங்கெடுக்க வேண்டும். தன் ஒரே மகனை வாலிப வயதில் அடித்து சித்ரவதை செய்து, சிலுவையில் அகோரமாகக் கொன்று போடுவார்கள். அதற்கு அந்தத் தாய் சம்மதிக்க வேண்டும். எந்தத் தாய் இதற்கு சம்மதிக்க முடியும்? ஏற்றுக்கொள்ள முடியாத ஒரு காரியம். இதைத்தான் அந்த வானதூதர் கேட்கிறார். ஒரு வேதனையான காரியம். மனிதர்களால் தாங்க முடியாத காரியம். செய்ய முடியாத காரியம். எல்லாருக்கும் முன்பாக, தன் மகன் அவமானமாக அடிக்கப்படுவதையும், கொடூரமாகக் கொல் லப்படுவதையும் அருகில் இருந்து தாங்க வேண்டிய ஒரு காரியம். ஆனால் மாதா என்ன சொன்னார்கள்? "***ஆண்டவரே, நான் உமக்கு அடிமை. உமது வார்த்தையின்படியே எனக்கு ஆகட்டும்***" (லூக்கா. 1:38) என்றார்கள். எதிர்த்துக் கூட பேச வில்லை. எனக்கு இவ்வளவு பாடுகள் வேண்டாம், கொஞ்ச மாகப் போதும் என்று அந்தப் பாடுகளைக் குறைக்கும்படி கூட கேட்கவில்லை. "ஆண்டவரே, நீர் என்ன சொன்னாலும் சரி, நான் உமக்கு அடிமை" என்று சொன்னார்கள்.*

அடிமை என்றால், சொந்தமாக எதையும் வைக்கவோ, விருப்பமான எதையும் செய்யவோ முடியாது. ஆனால் அன்னை மரியாள், “உமக்கு அடிமையாக இருக்கிறேன். ஆண்டவரே! உமது வார்த்தையின்படியே ஆகட்டும்” என்று சொன்னார்கள். அதுதான் அவர்களுடைய தாழ்மை. அப்படித் தாழ்த்தியதால்தான் ஆண்டவர் அவர்களை உயர்த்தினார்.

மாதாவும், சூசையப்பரும் இதைத்தான் செய்தார்கள். அவர்களிடத்தில் வேறு ஒன்றும் கிடையாது. இரண்டு பேருமே தங்களைத் தாழ்த்தக்கூடியவர்கள். மாதா, சூசையப்பர் நீங்கள் இன்றைக்குப் பார்க்கிற மாதிரி கிடையாது. இன்றைக்குப் பார்த்தீர்கள் என்றால், அவர்கள் சொரூபத்திற்குப் பளபளப் பான ஆடை அணிவித்து, அலங்காரம் செய்து வைத்திருக் கிறார்கள். அவர்கள் இந்த பூமியில் இருக்கும்பொழுது ஏழ்மையும், எளிமையுமாகத்தான் இருந்தார்கள் என்பதுதான் உண்மை. மாதாவும், சூசையப்பரும் தங்களுடைய சொந்த ஊருக்கு வருகிறார்கள். நன்றாக ஆடை அணிந்து வந்திருந்தால், கருவுற்றிருந்த மாதாவுக்கு ஒரு திண்ணையிலாவது இடம் கொடுத்து இருப்பார்கள். பிச்சைக்காரர்களைப் போன்று யாராவது வந்தால், அவர்களுக்கு ஏற்ற இடம் மாட்டுத் தொழுவம்தான். இவர்கள் என்ன ஆடை அணிந்து இருப் பார்கள்? எப்படி இருந்திருப்பார்கள்? திண்ணையில் கூட இடம் கொடுக்கவில்லை. சாணம் இருக்கக் கூடிய ஒரு மாட்டுத் தொழுவம்தான் கொடுத்தார்கள். அங்கு வேண்டு மானால் இருந்துகொள்ளுங்கள என்றார்கள். மாதா அங்கு செல்கிறார்கள். அவ்வளவு தன்னைத் தாழ்த்துகிறார்கள். உன்னதமான தேவகுமாரனை தன் கருவிலே தாங்கி இருந் தாலும், இந்த பூமியிலே மிகவும் தாழ்ந்த நிலையிலும் இருதயத் திலே தாழ்ந்த நிலையிலும்தான் இருந்தார்கள். ஆதலால்தான் தாழ்ந்த நிலையில் உள்ளவர்களை அவர் கடைக்கண் நோக்கி னார். யாரைக் கடைக்கண் நோக்குகிறார்? நான் ஜெபிக்கிறேன்,

*நான் நன்றாக செய்தி கொடுப்பேன் என்றால் திரும்பிக் கொள்வார். இருதயத்தில் தாழ்த்தி நீ போய் ஆண்டவரிடம் நின்றால் போதும், நீ கூப்பிட வேண்டும் என்று கூட அவசியமில்லை. ஆண்டவர் கடைக்கண் நோக்குகிறார். இன்றைக்கு இதுதான் இல்லை. உலகத்திலே இயேசுவுக்கு அடுத்தபடியாகப் புகழப்படுவது அன்னை மரியாள். அந்த அளவுக்கு தேவன் அவர்களை உயர்த்தினார். தன்னையே தாழ்த்துகிற ஒரு மனிதனைத் தேவன் உயர்த்துகிறார்.*

*தாவீதுடைய வாழ்வில் அவர் தன்னைக் கடவுளுக்கு முன்பாக முழுமையாகத் தாழ்த்துகிறார். ஆண்டவரிடத்தில் அவர் ஜெபிக்கிற ஜெபமே அதற்கு சாட்சி. அவர் ஆண்டவரிடம்,* **"நீர் உண்டாக்கிய அண்டசராசரங்களைப் பார்க்கின்ற போது, வானத்தில் உள்ள நட்சத்திரங்களையும், சூரியன், சந்திரனையும் பார்க்கின்றபோது, இந்த உலகத்தில் உள்ள மகிமையை, மேன்மையைப் பார்க்கிறபோது, மனிதனை நீர் ஒரு பொருட்டாக நினைக்க அவன் எம்மாத்திரம்?"** *(திருப்பாடல். 8:3-4). நீர் ஒரு பொருட்டாக என்னை நினைப்பதற்குக் கூட நான் தகுதியற்றவன் என்று சொல்கிறார். நான் ஒன்றுமில்லை ஆண்டவரே! என்று தம்மைத் தாழ்த்துகிறார். அதனால் ஆண்டவர் தாவீதை உயர்த்துகிறார்.*

*தேவனுடைய பிள்ளைகளை தேவன் உயர்த்த வேண்டுமென்றால், அவர்கள் தங்களைத் தாழ்த்த வேண்டும். நீங்கள் உங்களைத் தாழ்த்துகிறபோது ஒன்றும் செய்ய வேண்டாம். தேவன் உங்களை உயர்த்துவார். தாவீது, ஆபிரகாம் இவர்கள் ஒன்றும் செய்யவில்லை. தேவன் அவர்களை உயர்த்தினார். நீங்கள் உங்களைத் தாழ்த்துகிறபோது, தேவன்தாமே உங்கள் வாழ்க்கையில் நுழைந்து உங்களை உயர்த்துவார். ஆண்டவர் உங்கள் அருகில் இருந்து உங்கள் இருதயத்தைக் கூர்ந்து கவனிக்கிறார். உங்கள் இருதயத்தில் தாழ்ச்சி இருக்குமானால்,*

கடவுள் உங்களையும் உயர்த்துவார். இன்றைக்கு அந்தத் தாழ்மை இல்லாததால்தான் பலருடைய வாழ்க்கையில் உயர்வு இல்லை.

கடவுள் நம் ஒவ்வொருவருக்கும் சில தாலந்துகளை - திறமைகளைக் கொடுத்திருக்கிறார். சிலர் நன்றாகப் பேசு கிறார்கள், சிலர் நன்றாகப் பாடுகிறார்கள், சிலர் நன்றாக வரை கிறார்கள். சிலர் கடினமாகக் காலையிலிருந்து மாலை வரை வேலை செய்கிறார்கள். அது ஒரு திறமை. ஏன் இந்தத் திறமையை ஆண்டவர் கொடுத்திருக்கிறார்? இவைகளைக் கொண்டு தேவனுக்கு நீங்கள் ஊழியம் செய்யக் கொடுத்திருக் கிறார். சிலருக்கு இரக்க குணத்தைக் கொடுத்திருக்கிறார். ஏழை எளியவர்களைப் பார்த்த உடனே உதவி செய்யக் கூடிய ஒரு குணம். எல்லோருக்கும் அந்த குணம் இருப்பதில்லை. வியாதி யுள்ளவர்களுக்கு உதவி செய்யக்கூடிய ஒரு குணம். அவர் களுடைய அருகில் இருந்து கவனித்துக்கொள்வார்கள். எல்லா ராலும் இவ்வாறு செய்ய முடியாது. ஒரு சிலருக்குத்தான் அந்தக் குணத்தைக் கொடுத்திருக்கிறார். ஒரு சிலர் நன்றாகப் பேசுவார்கள். அவர்கள் பேசினாலே மனதிற்கு ஆறுதலாக இருக்கும். சிலர் நன்றாகப் பாடுவார்கள். இது கடவுள் அவரவர் களுக்குக் கொடுத்திருக்கிற கொடை. இந்தக் கொடைகள் எல்லாம் தேவனை மகிமைப்படுத்துவதற்காகக் கொடுக்கப் பட்டிருக்கிறது.

இந்தக் கொடைகளை தேவன் கொடுத்திருக்கிறபோது, நாம் தேவனை மகிமைப்படுத்த வேண்டும். இந்தக் கொடை களால் நாம் பெருமைப்படக் கூடாது. இந்தக் கொடைகள் பெருமைப்படுவதற்காகக் கொடுக்கப்படவில்லை. மாறாக, தேவனை மகிமைப்படுத்துவதற்காகக் கொடுக்கப்பட்டிருக் கிறது. சிலர் இந்தப் பெருமையினால் விழுந்து போய் விடு கிறார்கள். சிலர் நல்ல ஞானத்தோடு இருப்பார்கள்; சிலர்

*நன்றாக மனப்பாடம் செய்வார்கள்; சிலருக்கு எளிதாகப் புரிந்து கொள்ளக்கூடிய திறமை இருக்கும். கடினமானதைக் கூட எளிதில் புரிந்துகொள்வார்கள். இதுவெல்லாம் கடவுள் கொடுக்கக்கூடிய கொடைகள். ஆண்டவர் இவற்றைக் கொடுக்கும்போது நம்மை நாமே உயர்த்தக் கூடாது. எப்போது உயர்த்துகிறோமோ அப்போது விழுந்து போவோம். நம்மை யாரோடும் ஒப்பிடக்கூடாது, போட்டி போடவும் கூடாது. தேவன் உங்களுக்குக் கொடுத்திருக்கிற கொடைகள் நீங்கள் பெருமைப்படுவதற்கு அல்ல. அதற்குப் பதிலாக தேவனை மகிமைப்படுத்துங்கள்.*

## பெருமை கிருபையை இழந்து போகப் பண்ணும்

*கடவுள் ஒரு மனிதனை உயர்த்துவதற்கு அதிகமாகப் படித் திருக்கவோ, புத்திசாலியாகவோ இருக்க வேண்டும் என்று அவசியம் இல்லை. முட்டாள்களைக் கூட தேவன் உயர்த்து வார். ஆனால் தாழ்ச்சி உள்ளவர்களாக இருக்க வேண்டும். தேவன் பரலோகத்தில் இருந்து பூமியில் யாரை உற்றுப் பார்க் கிறார்? தாழ்ச்சி உள்ள ஒரு மனிதன் இருக்கிறானா என்று பார்க்கிறார். அப்படித்தான் ஆண்டவர் தாவீதைப் பார்க்கிறார். தாவீது மிக மிகத் தாழ்ச்சி உள்ளவராக இருந்தார். ஆட்சி செய்த எல்லா அரசர்களிலும் தாவீது மிகத் தாழ்ச்சியான அரசர். சிறுவனாக ஆடு மேய்க்கும்போது அவர் உள்ளத்தில் எப்படித் தாழ்ச்சி இருந்ததோ, அரசனான பிறகும் கூட அதே தாழ்மையை அவர் கொண்டிருந்தார். எல்லா ஜனங்களும் அவரைப் பேரரசர் என்று சொல்லும்போது கூட தாவீதின் உள்ளத்தில் தாழ்மை இருந்தது. அந்தத் தாழ்மையினால்தான் தேவனுக்கு முன்பாக நடனமாடினார் (2 சாமு. 6:14). தம்முடைய மனைவி கோபித்துக்கொள்ளும்போது கூட அவர் கவலைப்படவில்லை (2 சாமு. 6:20). ஆண்டவருக்கு முன்பாக நான் செய்வது சரிதான். இதை விடக் கீழானதைச் செய்யச்*

*சொன்னாலும் நான் செய்வேன் என்கிறார் (2 சாமு.6:22). அந்த அளவுக்குத் தம்மைத் தாழ்த்துகிறார். அப்படித் தாழ்த்தியதால் கடவுள் அவரை உயர்த்துகிறார். அவருடைய சந்ததியை ஆசீர் வதிக்கிறார்.*

*கிறீஸ்துவுக்குள் பிரியமான சகோதர, சகோதரிகளே, இப்போது உங்கள் உள்ளத்தை ஆராய்ந்து பாருங்கள். உங்க ளிடத்தில் பணம் இல்லாமல் இருக்கலாம்; உயர்ந்த பதவிகள் இல்லாமல் இருக்கலாம்; நீங்கள் அழகாக இல்லாமல் இருக் கலாம்; படிப்பு இல்லாமல் இருக்கலாம்; ஒரு நல்ல குடும்ப சூழல் இல்லாமல் இருக்கலாம். ஆண்டவர் இதையெல் லாம் பார்க்கவில்லை. ஒரு தனி மனிதனுடைய இருதயத்தில் தாழ்மை இருக்கிறதா என்றுதான் பார்க்கிறார். தாழ்மை இருக்குமானால், அவன் எந்தச் சூழ்நிலையில் இருந்தாலும், கடவுள் அவனை உயர்த்த வல்லவராக இருக்கிறார்.*

---------------

# 03. பரலோகத்திற்கு ஏழு படிக்கட்டுகள்

பால் (Paul) என்னும் ஊழியர் ஒருவர் இருந்தார். ஆண்டவர் அவரைப் பல இடங்களில் அதிகமாகப் பயன் படுத்தினார். நன்றாக ஜெபிக்கக்கூடிய ஓர் ஊழியராகவும், பரிசுத்தமுள்ள ஊழியராகவும் இருந்தார். ஒரு நாள் அவர் ஒரு தரிசனத்தைக் கண்டார். அந்தத் தரிசனத்திலே பரலோகத் திற்கும், பூமிக்கும் நடுவிலே ஏறத்தாழ ஏழு படிக்கட்டுகள் இருந்ததைக் கண்டார். அந்தப் படிக்கட்டுகளில் ஏறித்தான் பரலோகத்திற்குப் போக முடியும் என்று தேவன் அவருக்கு உணர்த்தினார். ஆகையால் அந்தப் படிக்கட்டுகள் என்னவாக இருக்கும் என்று அறியும் ஆர்வத்தில், முதலாவது படிக் கட்டுக்குப் போகிறார். பரிசுத்தம் என்று எழுதியிருக்கும் என்று அவர் எதிர்பார்த்தார். ஆனால், அதில் மனத்தாழ்மை என்று எழுதியிருந்தது. அது அவருக்கு மிக அதிர்ச்சியாக இருந்தது. அது வரைக்கும் அவர் மனத் தாழ்மையைப் பற்றி யோசிக்கவும் இல்லை, பிரசங்கம் பண்ணவும் இல்லை. அவர் பரிசுத்தத்தைக் குறித்து அதிகம் தியானித்தார், ஜெபித்தார். பரிசுத்தம் இல்லாததைப் பரிசுத்தம் பண்ணினார். ஆனால் தாழ்மை என்று எழுதியிருந்ததால் அவருக்கு அதிர்ச்சி யாக இருந்தது. அவர் எதிர்பார்த்ததெல்லாம் தூய்மை, பரிசுத்தம், விசுவாசம், இதுதான் இருக்கும் என்று நினைத்தார். பின், இரண்டாவது படிக்கட்டுக்குப் போய்ப் பார்த்தார். அதிலும், மனத்தாழ்மை என்று எழுதி இருந்தது. இப்படி அனைத்து படிக்கட்டுகளிலும் மனத்தாழ்மை என்று எழுதி யிருந்தது. அவர் அதைக் கண்டு அதிர்ந்து போனார்.

### தாழ்மை இல்லாமல் விண்ணகத்திற்கு வர முடியாது

ஒரு மனிதனைத் தேவன் உயர்த்துகிற இடம்தான் விண்ணகம் - பரலோகம். அவன் அப்படி உயர்த்தப்பட

வேண்டுமானால் அவன் உள்ளத்திலே தாழ்மை வேண்டும். தாழ்மை உள்ளவர்களைத்தான் பாவத்திலிருந்து தூக்கி எடுக்கிறார். பரலோக வாழ்வுக்கு அவனை உயர்த்துகிறார். தேவனோடு தங்கி இருக்கக் கூடிய மேன்மையான பாக்கியத்தை சாதாரண மனிதனுக்குக் கொடுக்கிறார். அதுதான் தேவன் மனிதனை உயர்த்துவது. இன்றைக்கு நிறைய கிறிஸ்தவர்கள் நரகத்தில் போய் விழுவதற்குக் காரணம் அவர்கள் பாவிகளாய் இருந்ததாலும் அல்ல. அவர்கள் ஏதோ பலவீனம் உள்ளவர்களாய் இருந்தார்கள் என்பதாலும் அல்ல, அவர்கள் தங்களைத் தாழ்த்த முடியாததால்தான். அந்தப் பெருமை அவர்களை அடிமையாக்கி நரகத்தில் கொண்டு போய் விடுகிறது. ஏனென்றால் தாழ்மை உள்ளவர்களுக்குத் தேவனுடைய கிருபை உதவி செய்து, அவர்களைப் பாவங்களிலே இருந்து வெளியே கொண்டு வருகிறது.

சகோதர, சகோதரிகளே! உங்கள் வாழ்க்கையில் சில பாவங்களும், பலவீனங்களும் இருக்கின்றன என்றால், அதில் நாம் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றும் இல்லை. அங்கே பெருமை நம்முடைய வாழ்க்கையில் இருக்கிறது. அந்தப் பெருமைதான் தேவனுடைய கிருபையை நாம் பெற்றுக் கொள்ள முடியாத வாறு தடுத்து விடுகிறது. ஆகையினால்தான் மீண்டும் மீண்டும் அதே பாவத்திலேயே விழுகிறீர்கள்.

நீங்கள் ஒருவேளை ஆலயத்தில் இருக்கலாம். ஊழியம் செய்துகொண்டு இருக்கலாம். சில நல்ல காரியங்களைச் செய்யலாம், நற்செய்திப் பணிகளைச் செய்யலாம். அந்தப் பெருமை உங்களுக்குள் இருக்கும்போது, அது உங்களைக் கீழே தள்ளி விடும். தேவனுடைய கிருபையை இழந்து போகப் பண்ணி விடும். ஊழியம் செய்தால், பாவம் செய்ய மாட்டோம் என்று நினைக்கிறார்கள். அல்லது ஜெபம்

செய்தால் நான் கீழே விழுந்து போக மாட்டேன் என்று நினைக்கிறார்கள். தேவனுடைய கிருபைதான் ஒரு மனிதனைப் பாவத்தில் விழாமல் தாங்கிப் பிடிக்கிறது. அந்தக் கிருபைக்குத் தாழ்மைதான் தேவை.

## தாழ்மை உள்ளவர்களைத் தமக்கெனத் தெரிந்துகொள்கிறார்

இயேசு கிறீஸ்து தம் அப்போஸ்தலர்களைத் தெரிந்து கொள்கிறபோது, அவர் படித்தவர்களைத் தேர்ந்து கொள்ள வில்லை. ஞானம் உள்ளவர்களைத் தெரிந்துகொள்ளவில்லை. புத்திசாலிகளைப் பார்த்துத் தெரிந்துகொள்ளவில்லை. அல்லது பணக்காரர்களைத் தெரிந்துகொள்ளவில்லை. இவற்றை எல்லாம் இயேசு பார்க்கவில்லை. ஒன்றை மட்டும் பார்க்கிறார். அவர்கள் உள்ளத்தில் தாழ்ச்சி இருக்கிறதா? இயேசு தாழ்ச்சி உள்ளவர்களைத் தெரிந்துகொள்கிறார். தாழ்ச்சி இல்லாதவர் களை அவர் தள்ளி விடுகிறார்.

நம் உள்ளத்தில் தாழ்மை இருக்கிறதா இல்லையா என்று அடிக்கடி சோதித்துப் பார்க்க வேண்டும். ஏனென்றால் இந்த உலகத்தில் எல்லாப் பாவமும் மனிதனின் அறிவுக்கு உட்பட்டது. பொய் சொல்கிறோம் என்றால், பொய் சொல்கிறோம் என்று நமக்குத் தெரியும். ஒரு தவறான பார்வை பார்க்கிறோம் என்றால், இச்சைகளுக்கு இடம் கொடுக் கிறோம் என்று தெரியும். எல்லாப் பாவங்களும் மனிதனின் அறிவுக்குத் தெரியும். ஆனால் ஒரு மனிதனுக்குள் பெருமை இருக்குமானால் அது அவனுக்குத் தெரியாது.

**எனக்குள் பெருமை இருக்குமானால் அது எனக்குத் தெரி யாது.** அதுதான் அந்தப் பாவத்தினுடைய கொடூரம். பெருமை யுடைய கொடூரம். மற்ற எல்லாப் பாவங்களைச் செய்கிறவர்கள் ஐயோ, நான் பாவம் செய்கிறேனே என்று மனம் வருந்துவார்கள்; மனந்திரும்புவார்கள். பெருமை உள்ளவர்கள்

அந்தப் பாவம் தன்னுள் இருப்பதை அறியாமல் இருக்கிறதால், அவர்கள் திருந்தவே முடியாமல் போய்விடுகிறது. அங்கேதான் அவர்கள் விழுந்து போகிறார்கள். அந்தக் கிருபையைப் பெற்றுக்கொள்ள வழி இல்லாமல் போய் விடுகிறது. ஆகையினால்தான் தேவ னுடைய பிள்ளைகள் தேவ சமூகத்தில் அடிக்கடி, தேவனே! எனக்குத் தாழ்மையைக் கற்றுக்கொடும் என்று கேட்க வேண்டும்.

---------------

## 04. கிருபையைப் பெற்றுக்கொள்வதற்கு வழி

*கிறீஸ்தவர்களில் பலரும், நான் ஒரு தவறும் செய்யவில்லை. யாருக்கும் நான் துரோகம் செய்யவில்லை. யாரையும் நான் ஏமாற்றவில்லை. அடுத்தவர்கள் பணத்திற்கு ஆசைப்படவில்லை. ஆலயத்திற்குப் போகிறேன், ஜெபிக்கிறேன், விவிலியம் வாசிக் கிறேன், இன்னும் சிலருக்கு உதவி செய்கிறேன் என்கிறார்கள். இதெல்லாம் நல்லதுதான். ஆனால் இப்படியெல்லாம் சொல் கிறபோது, நம் உள்ளத்தில் தாழ்மை இருக்கிறதா அல்லது பெருமை இருக்கிறதா என்று அவர்கள் கண்டுபிடிப்பதில்லை.*

*இருவர் ஜெபிக்கச் சென்றார்கள். ஒருவன் பரிசேயன், மற்றவன் ஆயக்காரன். இந்த ஆயக்காரனை எல்லாரும் பாவி என்று ஒதுக்கி வைத்திருந்தார்கள். இந்தப் பரிசேயனோ கடவுளுக்கு ஊழியம் செய்கிறவனாக இருந்தான். ஜெபிக்கிறவனாக இருந்தான். அவன் ஆண்டவர் முன் நின்றுகொண்டு,* **''வாரத்திற்கு இரண்டு நாள் உபவாசம் இருக்கிறேன். என் வருமானத்தில் பத்தில் ஒரு பங்கு கொடுக்கிறேன். இந்த ஆயக்காரனைப் போல் நான் இல்லாமல் இருப்பதற்காக நான் உமக்கு நன்றி செலுத்துகிறேன்''** *என்றான். அந்த ஆயக்காரன் தூரத்தில் நின்றபடி,* **''ஆண்டவரே, நான் பாவி. என்மீது இரக்கமாயிரும்''** *என்றான். அப்போது ஆண்டவர், நீதிமானாகத் திரும்பியது ஆயக்காரனே என்றார் (லூக்கா. 18:10-14). பரிசேயன் தன்னுடைய பெருமையால் தேவன் கொடுக்கக் கூடிய கிருபையை இழந்து விட்டான்.*

*ஆண்டவரிடம் பெற்றுக்கொள்ளக்கூடிய கிருபையைப் பெருமையால் இழந்துவிட முடியும். கிறீஸ்தவர்கள் பலர் ஆலயத் திற்கு போகிறார்கள். ஆனால் எல்லாரும் தேவனுடைய கிருபை யைப் பெறுவதில்லை. சிலருக்குத்தான் அது கிடைக்கிறது. இன்னும் சிலர் கிருபை பெறாமல் திரும்பிப் போகிறார்கள்.*

*ஆண்டவர் ஒரு முறை என்னிடம் இவ்வாறு கூறினார்: எவ்வளவு மழை பெய்தாலும், மேடான பகுதியில் ஒரு துளித்*

தண்ணீர் கூட நிற்காது. எல்லாத் தண்ணீரும் வழிந்து, எங்கே பள்ளம் இருக்கிறதோ, அங்கே ஓடி விடும். அதே போலத்தான் ஜெபக் கூட்டத்தில் ஆண்டவருடைய அருள் ஏராளமாக ஊற்றப் பட்டாலும் யாருடைய உள்ளம் தாழ்மையாக இருக்கிறதோ, அந்த உள்ளத்தில் ஆண்டவருடைய கிருபை தங்கும். **பெருமை யுடைய உள்ளத்தில் ஆண்டவரின் கிருபை இறங்கவும் செய்யாது, தங்கவும் செய்யாது.** ஆகையால்தான் பலர் ஜெபத்திற்கு வந்தா லும் கூட, ஒரு சிலர் வாழ்க்கையில்தான் தேவனுடைய வல்லமை வெளிப்படுவதைப் பார்க்கிறோம். அவர்கள் வாழ்க்கையில் விடுதலையும், மாற்றங்களும் உண்டாவதைப் பார்க்கிறோம்.

பெருமையினால்தான் வானதூதர்களாய் இருந்தவர்கள், இரவும், பகலும் தேவ சமூகத்தில் தேவனை ஆராதித்துக் கொண் டிருந்த சம்மனசுக்கள், அங்கே இருக்க முடியாத அளவுக்கு, கீழே தள்ளப்பட்டார்கள். அப்படியானால், இந்தப் பூமியிலே, மனிதன் பெருமையோடு இருப்பானானால், ஆண்டவர் கொடுக்கிற அந்த அருளை, கிருபையைப் பெற்றுக்கொள்ள முடியுமா?

உங்கள் வாழ்க்கையில் மன அமைதி இல்லாமல், சஞ்சலத் தோடு, போராட்டத்தோடு இருக்கின்றீர்களா? அதற்கு ஒரே ஒரு காரணம் தாழ்மை இல்லாததுதான். தாழ்மை உள்ள இருத யத்தில் தேவனுடைய கிருபை இறங்கும். அந்தக் கிருபைதான் உள்ளத்தில் ஒரு அமைதியைக் கொடுக்கும். அந்தப் போராட் டத்தை நீக்கி, சஞ்சலத்தை நீக்கி, ஒரு சமாதானத்தைக் கொடுக்கும். அந்தத் தாழ்மை இல்லாததால்தான் பலர் வாழ்க் கையில் நிம்மதி இல்லாமல் இருக்கிறார்கள். இன்றைக்கும் இயேசு சர்வ வல்லவராகவே இருக்கிறார். அவருடைய அருளை ஊற்றக்கூடியவராகவே இருக்கிறார். தாழ்த்துகிறவர் களை உயர்த்தக்கூடியவராக இருக்கிறார்.

**தம் சொந்த மகனென்றும் பாராது அவரை நம் அனை வருக்காகவும் ஒப்புவித்த கடவுள், தம் மகனோடு அனைத்தையும்**

**நமக்கு அருளாதிருப்பாரோ?** (*உரோமையர் 8:32*). *ஏனென்றால் பரலோகத்தின் மேன்மை, பிதாவின் சந்தோஷம் எல்லாம் இயேசு கிறீஸ்துதான். அந்த இயேசு கிறீஸ்துவையே எனக்காகக் கொடுத்து விட்டார் என்றால், இயேசுவோடு எதையாவது கொடுக்காமல் இருப்பாரா? நமக்கு அமைதி கொடுக்காமல் இருப்பாரா? சந்தோஷத்தைக் கொடுக்காமல் இருப்பாரா? சுகத்தைக் கொடுக்காமல் இருப்பாரா? பணத்தைக் கொடுக் காமல் இருப்பாரா? யோசித்துப் பாருங்கள். எல்லாவற்றையும் கொடுப்பார். ஏனென்றால் தம் சொந்த மகனையே கொடுத்து விட்டார். இருப்பதிலேயே சிறந்தவர், மதிப்பு மிக்கவர் இயேசு தான். தாழ்மை இல்லாமையினாலே அந்தக் கிருபை நம் வாழ்வில் வராமல் இருக்கிறது. யார் தாழ்த்துகிறார்களோ அவரிடத்தில் தான் அந்தக் கிருபை வருகிறது. ஒவ்வொரு மனிதனுக்கும் ஆண்டவர் அந்தக் கிருபையைக் கொடுக்க வல்லவர். ஒவ்வொரு மனிதனையும் ஆசீர்வதிக்க வல்லவர். சிலர் தன்னைத் தாழ்த் தாததினால் தேவன் துக்கப்படுகிறார். அதனாலே அவர்கள் வாழ்க்கையில் சுகமில்லாமல் போகிறது. ஏனென்றால் ஆண்டவர் எவ்வளவு கிருபையை ஊற்றினாலும், பெருமை இருக்கிற வரைக்கும், அந்தக் கிருபை அங்கு தங்க முடியாமல் போகிறது.*

*சேசு சபையில் அலங்காரம் என்ற ஓர் அருட்சகோதரர் இருந்தார். பல ஆவிக்குரிய வரங்களுடன் நல்ல ஜெப வாழ்க் கையில் இருந்தவர். என்னுடைய வாலிப நாட்களில் அவரோடு சில நாட்கள் நற்செய்திப் பணிக்குச் சென்றிருக்கிறேன். அவர் தன் வாழ்க்கையில் நடந்த ஒரு சம்பவத்தை என்னோடு பகிர்ந்து கொண்டார். அவருடைய வாழ்க்கையில் ஒரே சோதனையும், போராட்டமுமாக இருந்தது. அவரால் தூங்கவே முடியவில்லை. சில பிசாசுகள் அவரது அறைக்கு வந்து அவரைத் தொல்லைப் படுத்தின. கட்டிலில் படுத்திருந்தால் தலையணையைப் பிடித்து இழுத்து விடும்; கட்டிலைக் கவிழ்த்து அவரைக் கீழே தள்ளி விடும். முகத்திற்கு முன்பாக வந்து நின்று,* **"ஹி...ஹி...ஹி..."**

*என்று பயங்கரமாக சிரிக்கும். கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்! எப்படித் தூங்க முடியும்? ஒரு நாள், இரண்டு நாள் இல்லை. இப்படி ஆறு மாதங்கள் பிசாசின் தொல்லையினால் அதிக மாய்த் துன்பப்பட்டார். இப்படி ஒரு வாழ்க்கையா? இதை விட செத்துப் போய்விடலாம் என்று கடைசியாகத் தற்கொலை செய்து விடலாம் என்ற தவறான முடிவுக்கே வந்து விட்டார்.*

*இப்படி இருக்கும்போது, ஒரு நாள் காலை, உணவறைக்குப் போனார். அங்கே அவருக்குத் தெரிந்த திரு இருதய சபையைச் சார்ந்த ஓர் அருட்சகோதரர் இருந்தார். அவர் இவரைப் பார்த்து, "என்ன அலங்காரம், சந்தோஷமா இருக்கியா?" என்று கேட்டார். "ஆமா, சந்தோஷமாத்தான் இருக்கேன்" என்று சொல்லிவிட்டு தன்னுடைய அறைக்குத் திரும்பிப் போகிற போது, அவருக்குள்ளே ஒரு கேள்வி எழுந்தது. எல்லோரும் "நல்லா இருக்கியா?" என்றுதானே கேட்பார்கள். இவன் எதற்கு என்னைப் பார்த்து "சந்தோஷமா இருக்கியா?" என்று கேட்டான்? நாம்தான் இன்னைக்கு சாகலாம் என்று இருக்கிறோமே. ஒருவேளை நம்முடைய பிரச்சினை இவனுக்குத் தெரிந்திருக்குமோ? மனதிலே உறுத்தல், ஒரே போராட்டம். நேரில் போய்க் கேட்டு விட்டு, பிறகு சாகலாம் என்று முடிவு செய்து, திரும்பவும் உணவறைக்குச் சென்றார். அவரிடம் வந்து, "எல்லாரும் நல்ல இருக்கியா?" என்றுதானே கேட்பார்கள்? நீ எதற்கு என்னை "சந்தோஷமாக இருக்கிறாயா?" என்று கேட்டாய்?" என்று கேட்டிருக்கிறார். அதற்கு அவர், "நீ திரும்பி வருவாய் என்று எனக்குத் தெரியும். நீ இப்படிக் கஷ்டப் பட்டுக்கொண்டிருக்கிறாய் என்றுதான் ஆண்டவர் என்னை அனுப்பினார்" என்று சொன்னார். அதன்பிறகு அவர் ஒரு சிறு ஆலோசனையைக் கூறினார். அந்த ஆலோசனைக்குக் கீழ்ப் படிந்த உடனே அந்தப் பிசாசுகள் எல்லாம் ஓடிவிட்டன. அதன் பிறகு அந்த பிசாசுகள் அவருடைய வாழ்க்கையில் தொல்லை பண்ண வரவேயில்லை. ஆமென்! அல்லேலூயா!*

## 05. பிறர் என்ன நினைத்தால் என்ன?

*கானானியப் பெண் இயேசுவிடம் வருகிறாள். "ஆண்டவரே, என் மகள் பேய்பிடித்துப் பெரிதும் துன்புறு கிறாள். உதவி செய்யும்" என்று கத்திக்கொண்டே வருகிறாள். இயேசு அமைதியாக இருக்கிறார். சீடர்கள் அவள் கத்துவதைக் கண்டு கோபம் கொள்கிறார்கள். அவர்கள் இயேசுவிடம் சொல்கிறார்கள். அப்போது ஆண்டவர்,* **"பிள்ளைகளுக்குரிய உணவை எடுத்து நாய்க்குட்டிகளுக்குப் போடுவது முறையல்ல"** *என்கிறார் (மத்தேயு 15:26).*

*ஜெபத்திற்கு அல்லது தியானத்திற்கு வரும்போது, அங்குள்ள ஊழியர்கள் யாராவது உங்களைப் பார்த்து இவ்வாறு சொல்லி விட்டார்கள் என்றால் என்ன செய்வீர்கள்? அதன் பிறகு நீங்கள் தியானத்தில் கலந்துகொள்வீர்களா? மாட்டீர்கள். ஏனென்றால் அந்த அளவுக்குப் பெருமை இருக்கிறது. ஆனால் அந்தப் பெண்,* **"மேசையிலிருந்து விழும் சிறு துண்டுகளை நாய்க்குட்டிகள் தின்னுமே"** *என்றாள் (மத்தேயு. 15:27). அந்த நாய்க்குட்டி மாதிரி, சிந்திய உணவு கூட எனக்குக் கிடைத்தால் போதும் என்கிறாள். தேவனுடைய இராச்சியத்தில் ஒரு நாயைப் போல் இருந்து கொள்கிறேன் என்கிறாள். அப்போதுதான் ஆண்டவர் பார்க்கிறார். அவள் தன்னைத் தாழ்த்தியதைப் பார்க்கிறார்.* **"அம்மா, உன் விசுவாசம் பெரியது, உன் மகள் சுகமாகிவிட்டாள்"** *என்கிறார் (மத்தேயு 15:28).*

*கிறீஸ்துவுக்குள் பிரியமான சகோதர, சகோதரிகளே, சில நேரங்களில் தேவன் நம்மைத் தாழ்த்தும்போது, தாழ்ச்சியை நாம் கற்றுக்கொள்வதற்காக அவ்வாறு செய்கிறார். ஆனால் யார் ஒருவர் தன்னைத் தாழ்த்துகிறார்களோ, அவர்களைத் தேவன் உயர்த்துகிறார். உங்கள் வாழ்க்கையில் உயர்வு வேண்டும் என்றால், உங்களைத் தாழ்த்துங்கள்.*

*(ஆயினும் உயர வேண்டும் என்பதற்காக உங்களைத் தாழ்த்தாதீர்கள்.) தாழ்ச்சி இல்லாமல் ஒருபோதும் உயர்வு இல்லை.*

*தாழ்ச்சி உள்ளவர்கள் மீதுதான் தேவனுடைய கிருபை தங்கும். பல மாதங்கள், பல நாட்கள் நீங்கள் ஜெபிக்கிறவர் களாக இருக்கலாம். ஆலயத்தில் அழுது ஜெபிக்கலாம். அல்லது பரிசேயர்களைப் போல வாரத்திற்கு இரண்டு நாட்கள் உபவாசமிருந்து ஜெபிக்கலாம். ஆனாலும் தாழ்ச்சி இல்லை என்றால், தேவனுடைய அருள் உங்களிடம் தங்காது. இதைத் தெரிந்துகொள்ளுங்கள். நீங்கள் இரண்டு நாள் உபவாசம் இருந்து தாழ்ச்சி இல்லாமல் ஜெபிப்பதை விட, ஒரு மணி நேரம் தாழ்ச்சியோடு தேவ சமூகத்தில் இருப்பது மேன்மை யானது. ஏனென்றால் அப்போது தேவனுடைய அருள் உங்களிடம் தங்கும்.*

*பலர் ஆண்டவருடைய அருளை இழந்து போவதற்குக் காரணம் அவர்களுடைய பெருமைதான். விவிலியத்தில் தங்களைத் தாழ்த்தியவர்கள் எல்லாம் அற்புதங்களைப் பெற்றார்கள். மேன்மை அடைந்தார்கள். ஆனால் பரிசேயர்கள் தங்களைத் தாழ்த்த முடியாததால், இயேசுவின் எதிரிகளாக மாறினார்கள். இன்றும் சிலர் தாழ்ச்சி இல்லாததினால் ஆண்டவருடைய மேன்மையான கிருபைகளைப் பெற்றுக் கொள்ள முடியாமல் போய்விட்டார்கள்.*

## சக்கேயுவின் மீட்பு

*யோசித்துப் பாருங்கள்! இன்றைக்குப் பலர் மற்றவர்கள் எதுவும் நம்மைப் பற்றி எதுவும் தவறாக நினைத்து விடக் கூடாது என்று நினைக்கிறார்கள். இயேசு இந்த உலகத்தில் இருக்கும்போது,* **‘‘வீட்டுத் தலைவரையே பெயல்சேபுல் - பேய்களின் தலைவன் - என்று சொல்கிறார்கள், வீட்டில்**

**உள்ளவர்களை எவ்வளவு தரக்குறைவாகச் சொல்வார்கள்?''** என்று கேட்டார் (மத்தேயு **10:25**). இயேசுவின் வீட்டில் நீங்கள் இருப்பீர்களானால், உங்களையும் அப்படித்தான் சொல்வார்கள். தலைவனையே அப்படிச் சொல்கிறார்கள் என்றால் அந்த வீட்டில் நீங்கள் ஒருவராக இருந்தீர்களானால், உங்களையும் அப்படித்தான் சொல்வார்கள். ஆனால் பெருமையுள்ள மனிதர்கள் தங்களை யாரும் ஒன்றும் சொல்லி விடக் கூடாது என்று பயப்படுகிறார்கள்.

சக்கேயுவுடைய வாழ்க்கையை வாசித்துப் பாருங்கள் (லூக்கா. **19:1-9**). இயேசு எரிகோ என்ற பட்டணத்திற்குப் போன போது, அங்கே ஏராளமான சீடர்கள் அவரைச் சூழ்ந்து இருந்தார்கள். பரிசேயர்களும் அவரோடு கூடப் போனார்கள். அங்குள்ள ஜெபக்கூடத் தலைவர் மற்றும் நன்றாக ஜெபம் செய்கிறவர்கள், இயேசு தங்கள் வீட்டுக்குத் தான் வருவார் என்று நினைத்தார்கள். ஆனால் இயேசு யார் வீட்டுக்கும் செல்லவில்லை. இயேசு நேராக மரத்தில் ஏறியிருந்த சக்கேயு அருகில் சென்று, **''சக்கேயு, கீழே இறங்கி வா. நான் இன்று உன் வீட்டில் தங்கப் போகிறேன்''** என்று சொன்னார். இந்த சக்கேயுவை அந்த ஊர் மக்கள் பாவி என்று சொல்லி வெறுத்து ஒதுக்கினார்கள். அது உண்மை தான். ஏனென்றால் சக்கேயுவின் வேலை அப்படி. ஏற்கெனவே இந்த ஜனங்கள் அவரை வெறுக்கிறார்கள். ஏனென்றால் அவர் வரியை வசூல்செய்து உரோமையர்களுக்குக் கொடுத்தார். சக்கேயு குள்ளனாக இருந்தார். இதிலே அவர் ஒரு மரத்தில் ஏறினால் அங்கு உள்ளவர்கள் என்ன சொல்வார்கள்? கேலி செய்வார்கள். வேறு யாருக்கும் அவரைப் பிடிக்காது. ஆனால் சக்கேயு அதைப் பற்றி எல்லாம் கவலைப்படவில்லை. யார் என்ன பேசினாலும் பேசி விட்டு போகட்டும். யார் என்னைப் பற்றி என்ன நினைத்தாலும் நினைக்கட்டும்; எனக்கு இயேசு வேண்டும் என்று நினைத்தார்.

## பாவியான பெண்ணின் தாழ்ச்சி

ஒரு பாவியான விபச்சாரப் பெண்ணைக் குறித்துப் பார்க்கிறோம். அந்தப் பெண் இயேசுவினிடத்தில் வருகிறாள். இயேசு ஒரு பரிசேயனுடைய வீட்டில் இருக்கிறார். இந்தப் பெண்ணிற்கு என்ன தேவை? பாவ மன்னிப்பும், பாவத் திலிருந்து விடுதலையும் தேவை. ஊரில் எல்லாராலும் அறியப்பட்ட ஒரு பெண். அவளுடைய பாவங்கள் வெளியில் எல்லாருக்கும் தெரிந்துவிட்டது. நம்முடைய பாவங்கள் வெளியில் தெரியவில்லை. எப்படியோ மூடிப் பூட்டி வைத்திருக்கிறோம். அவ்வளவுதான் வித்தியாசம். இந்தப் பெண் இயேசுவைச் சந்திப்பதற்காகப் பரிசேயனுடைய வீட்டிற்கு வருகிறாள். அந்தப் பெண் ஒரு பாவத்திலிருந்து விடுதலை பெற வேண்டும். நாமும் ஏதோ ஒரு பாவத்திலிருந்து விடுதலை பெற வேண்டும். தேவனுக்கு முன்பாக இரண்டும் ஒன்றுதான். அந்தப் பெண் இயேசுவினிடத்தில் வந்து மனம் கசந்து அழுகிறாள். சுற்றி இருப்பவர்கள் என்ன நினைப் பார்கள்? அவர்கள் என்ன சொல்வார்கள்? இவர்கள் என்ன சொல்வார்கள்? வேறு மாதிரி பேசுவார்களே! என்று அவள் மனம் எதையும் நினைக்கவில்லை. நீங்கள் அப்படி நினைக்காமல் இருக்கிறீர்களா? என்னைப் பற்றி என்ன சொன்னாலும், நினைத்தாலும் கவலை இல்லை. எனக்குத் தேவை பாவத்திலிருந்து விடுதலை. நான் இயேசுவோடு ஒப்புரவாக வேண்டும். இந்த பாவம் அதற்குத் தடையாக இருக்கிறது. ஆகையால் இது எனக்கு தேவை இல்லை. எனக்கு இயேசு தேவை. ஆதலால் யார் என்ன நினைத்தாலும் பரவாயில்லை. அப்படி என்றால் அவள் தன்னை ஒன்றும் இல்லை என்று நினைத்து விட்டாள். பூஜ்ஜியம் என்று நினைத்து விட்டாள். தன்னைப் பற்றி யார் என்ன சொன்னாலும், திட்டினாலும் அது அவளைப் பாதிக்கப் போவதில்லை. உங்களையும் என்னையும் அது பாதிக்கிறது

*என்றால் என்ன அர்த்தம்?* **யாராவது ஏதாவது சொல்லப் போகிறார்கள், நினைக்கப் போகிறார்கள் என்று நினைத்து நினைத்துச் செய்ய வேண்டிய நிறைய காரியங்களை செய்யாமல் உட்கார்ந்து கொண்டிருக்கிறோம்.** *இதற்குப் பெயர் தாழ்ச்சியா? அகங்காரத்தினால்தானே கட்டாயம் செய்ய வேண்டியவற்றைக் கூட செய்ய முடியவில்லை. மனுஷன் என்ன நினைப்பான் என்று நீ நினைக்கிறாய் என்றால் உனக்குள்ளே தாழ்ச்சி இருக்கிறதா? மனுஷன் உன்னைப் பற்றி என்ன சொல்வான் என்று நினைத்தால் உனக்குள் தாழ்ச்சி இருக்கிறதா? எப்படி உருவாக்கப்பட்டாய்? மண்ணிலிருந்து உருவாக்கப்பட்டாய். நீ மண்ணாயிருக்கிறாய். எத்தனை பேர் மண் என்று சொல்கிறீர்கள்? நீ மண் என்றால் எல்லோரும் மிதித்து விட்டுப் போகட்டும். காறித் துப்பி விட்டுப் போகட்டும். ஐயோ, என்னை மிதித்து விடுவானோ? திட்டி விடுவானோ என்று பயந்து பயந்து வாழ்ந்து கொண்டிருக் கிறோமே! அதனால் செய்ய வேண்டிய எத்தனை காரியங் களை செய்யாமல் இருக்கிறோமே! அவள் அப்படி இல்லையே. அவள் ஊரறிந்த ஒரு பாவி. எல்லோரும் ஒதுக்கி வைத்த ஒரு பெண். அவளுடைய இருதயத்திலே தாழ்ச்சி இருப்பதால், இயேசுவிடத்தில் வந்து விடுதலையைப் பெற்றுக் கொண்டாள். இன்று அந்த தாழ்ச்சி இல்லாததால் ஆண்டவரிடத்தில் வந்தாலும் விடுதலையைப் பெற்றுக் கொள்ளாமல்தானே போகிறோம்? எங்கேயோ ஒரு காரியத் திலே அடிமைத்தனம் குடிகொண்டுதானே இருக்கிறது? அதனால் தானே நிறைய நன்மைகளை உங்களால் செய்ய முடியவில்லை? இப்படியே நினைத்துக்கொண்டிருந்தால் எவன் நல்லது செய்ய முடியும்? ஆண்டவருக்காக யார் நிற்க முடியும்? தாழ்த்தினீர்கள் என்றால், மற்றவர்கள் என்ன சொல்வார்கள் என்று பார்க்காதீர்கள். யார் உன்னை என்ன வேண்டுமானாலும் சொல்லிவிட்டுப் போகட்டும்.*

*மனிதனுடைய வார்த்தைக்கு மதிப்பே இல்லை. காற்றோடு காற்றாய்ப் போய்விடும். அது நம்மை ஒன்றும் செய்யாது. அதற்குப் போய் பயந்துகொண்டு ஏன் அதை அதிகமாக நினைத்துக்கொண்டிருக்கிறாய்? அதற்கு முக்கியத்துவம் கொடுக்காதே. ஆண்டவர் உன்னைக் குறித்து என்ன நினைப்பார் என்று பார். ஆண்டவர் உன்னை நேசிக்கிறார். ஆண்டவருக்கு முன்னால் உன்னைத் தாழ்த்து, குப்பை என்று சொல்.*

### அரசர் தாவீதின் தாழ்ச்சி

**நார்ப் பட்டால் நெய்யப்பட்ட ஏபோதை அணிந்து கொண்டு தாவீது தம் முழு வலிமையோடு ஆண்டவர் முன்பாக நடனமாடிக் கொண்டிருந்தார்** *(2 சாமுவேல் 6:14). ஆடு மேய்க்கிறவன் என்ன ஆடி இருப்பான்? அவர் ஒரு நாட்டிய கலைஞர் கிடையாது. அவர் ஒரு அரசர். தேசத்திற்கே அதிபதி. கண்ணைக் காட்டினால், கையைக் காட்டினால் ஆயிரம் பேர் வந்து நிற்பார்கள். அப்படி ஒரு ஆள் ஆண்டவர் முன்பாக ஏபோது என்ற சணல் ஆடையை அணிந்துகொண்டு கூத்தாடுகிறார். உங்கள் கணவர் இப்படி ஆடினால் என்ன சொல்வீர்கள்? நற்கருணை பவனி வைக்கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். திடீரென்று அதற்கு முன்பாகப் போய் அவர் ஆடத் தொடங்கி விட்டார். நீங்கள் என்ன செய்வீர்கள்? நீங்கள், உங்கள் உறவினர்கள் எல்லாரும் சேர்ந்து அவரைப் பத்திரமாகப் பிடித்துக்கொண்டு பாதுகாப்பாக வீட்டுக்குக் கொண்டு போய் விடுவீர்கள். அப்படித்தானே? இதை சவுலின் மகள் மீக்கால் பார்க்கிறாள். பார்த்து தாவீதை மனதிற்குள் பழிக்கிறாள். இந்தக் கூத்தாடிப் பயல் ஆடு மேய்க்கும் புத்தியைக் காட்டி விட்டானே என்று சொல் கிறாள். இவன் ஒரு பைத்தியம். ராஜ பரம்பரையில் பிறந் திருந்தால்தானே தெரியும்? எல்லாரும் ஒரு அந்தஸ்தை*

*வைத்துக்கொண்டிருக்கிறார்கள். உனக்கு யார் அந்தஸ்தைக் கொடுத்தார்கள்? எத்தனை நாளைக்கு இந்த அந்தஸ்து வரப் போகிறது? இன்னும் ஒரு 10 வருடம் வருமா? அதன் பிறகு, உன் அந்தஸ்து எல்லாம் எங்கே போகும்? மேலே போனால் ஒரே அந்தஸ்துதானே? இவர் ஆடிவிட்டு எல்லாரையும் ஆசீர்வதித்து விட்டு மனைவியை ஆசீர்வதிப்பதற்காகத் திரும்பி வருகிறார். இவள் திரும்பிக் கொண்டிருக்கிறாள். ஆசீர்வதிக்க வந்தவருக்கு அதிர்ச்சியாகி விடுகிறது. "எல்லார் முன்பும் இப்படி நீர் ஆடினது ரொம்ப லட்சணமாக இருந்தது" என்று சொல்கிறாள். தாவீது அழகாகச் சொல் கிறார்: ஆடு மேய்க்கிறவனாக இருந்த என்னை, குப்பையில் இருந்த என்னை, ஆண்டவர் தூக்கினார். ஆண்டவருக்கு முன்பாக நான் செய்தது சரிதான். இதையும் செய்வேன். இதை விடக் கீழானதைச் செய்யச் சொன்னாலும் செய்வேன் என்று சொன்னார். அதனால்தான் தாவீதை* **என் மனதிற்கு உகந்தவன்** *என்று ஆண்டவர் சொன்னார் (திருத்தூதர் பணி. 13:22). இருதயத்திற்கு ஏற்றவனாக, உகந்தவனாகக் கண்டேன் என்று சொல்கிறார். தாவீதின் குமாரன் என்று தான் இயேசுவுக்குப் பெயர். சாலமோன் அவ்வளவு ஞானத்தைப் பெற்றிருந்தாலும், சாலமோனின் குமாரன் என்று அவருக்குப் பெயர் இல்லை. தாவீதின் குமாரன் என்றுதான் பெயர். அப்படிப்பட்ட ஒரு பாக்கியத்தைக் கடவுள் தாவீதுக்குத்தான் கொடுத்தார். அதற்கு என்ன காரணம்? தாவீது கடைசி வரைக்கும் தாழ்ச்சி உள்ளவராய் நடந்து கொண்டார்.*

*நான் சொன்ன காரியங்களில் உள்ளவர்கள் எல்லோரும் வேதத்திலே தங்களை ஒரு பூச்சியமாக, ஒன்றும் இல்லை, கூமுட்டை என்றுதான் நினைத்தார்கள். தங்களை ஒரு பெரிய ஆளாக நினைக்கவில்லை. இன்றைக்கு பைபிளை கையில் எடுத்தவுடன் தலையில் ஒரு கிரீடம் சூட்டியதாக நடந்து*

*கொள்கிறார்கள். ஜீவ கிரீடத்தை வாங்கியவுடன் பரலோகத்தில் எப்படி இருப்பார்களோ அப்படி ஒரு நினைப்பில் இங்கே நடக்கிறார்கள். தயவு செய்து அதெல்லாம் தூக்கிப் போட்டு விடுங்கள். ஆண்டவருக்கு முன்பாக உங்களைத் தாழ்த்தத் தொடங்குங்கள். தாழ்ச்சி உள்ளவர்களுக்கு ஆண்டவர் கிருபை அளிக்கிறார். அவருடைய கிருபையைப் பெற்றுக்கொள்ள வேண்டும் என்றால் இன்னொரு காரியத்தை வேதத்தில் இருந்து பார்ப்போம்.*

*தாவீதினுடைய அரசாட்சியை அவருடைய சொந்த மகன் அப்சலோம் பறித்துக்கொண்டு தாவீதைக் கொலை செய்வதற்குத் தேடுகிறான். உங்கள் பிள்ளையே உங்கள் ஆட்சியைப் பறித்துக்கொண்டு உங்களைக் கொலை செய்வதற்குத் தேடினால், உங்கள் மனது எப்படி இருக்கும் என்று யோசித்துப் பாருங்கள். இந்தச் சூழ்நிலையில்தான் தாவீது போய்க் கொண்டிருக்கிறார் (2 சாமுவேல் 16.5,6).* **தாவீது பகூரிம் வந்தபோது, சவுலின் குடும்பத்தையும், வீட்டையும் சேர்ந்த ஒருவன் அவரை எதிர்கொண்டான். அவன் கேராவின் மகனான சிமயி. அவன் அவரைப் பழித்துக்கொண்டே எதிரே வந்தான். அவன் தாவீதின் மீதும், தாவீது அரசரின் எல்லாப் பணியாளர் மீதும், எல்லா மக்கள் மீதும், அவர் தம் வலமும், இடமும் இருந்த வீரர்கள் மீதும் கல்லெறிந்தான்**. *இவரே நொந்து போய் இருக்கிறார். இப்போது ஒருவன் வந்து அவர்கள் மீது கல்லெறிகிறான். தாவீதுக்குப் பதிலாக நீங்கள் இருந்திருந்தால் அங்கே என்ன நடந்திருக்கும்? ஒன்றுமே இல்லை என்றாலும், லேசாகப் பயமுறுத்தி விட்டாவது வருவீர்களா? ஒருவன் மட்டும் நின்றுகொண்டு வசை மட்டும் கூறவில்லை. எல்லார் மீதும் கல்லும் எறிகிறான். தொடர்ந்து பாருங்கள் (2 சாமுவேல் 16:7, 8). சிமயி பழித்துக் கூறியது:* **"இரத்த வெறியனே! பரத்தை மகனே! போ! போ! நீ சிந்திய சவுல் வீட்டாரின் இரத்தப் பழி அனைத்தையும் ஆண்டவர் உன்மீது வரச் செய்துள்ளார்."** *சவுல்*

*வீட்டாருக்குத் தாவீது எந்தத் தீங்கும் செய்யவில்லை. கடைசி வரைக்கும் சவுலுக்கு அவர் தீங்கு நினைத்ததே இல்லை. சவுல் மரிக்கும்போது வாளை எடுத்து அவனைக் குத்தியவனைக் கூட அபிஷேகம் பண்ணப்பட்ட வரை நீ கொன்று விட்டாயே! என்று சொல்லிக் கொலை செய்கிறார். அந்த அளவிற்கு சவுல்மீதும், அவருடைய குடும்பத்தின் மீதும் மரியாதை வைத்திருந்தார். ஆனால் இவன் சவுல் குடும்பத் திற்கு நீ செய்த துரோகத்தின் காரணமாகத்தான் உனக்கு இந்தத் தண்டனை என்று சொல்கிறான். அதாவது, இல்லாதது பொல்லாததெல்லாம் அவர் மேல் வைத்துச் சொல்கிறான். நீங்கள் தனியாய் இருக்கும்போதே உங்களிடம் வந்து இப்படி இல்லாதது பொல்லாதது சொல்லி விட்டால் போதும். இவ்வளவு வேலைக்காரர்களையும் முன்னால் வைத்துக் கொண்டு சொல்கிறான். ஊழியத்தில் கூட யாராவது ஒரு வார்த்தை சொல்லி விட்டால் போதும். அதோடு ஜெபத்திற்கு வர மாட்டார்கள். 200 பேரை வைத்துக்கொண்டு சொல்லி விட்டால், அவ்வளவு பேருக்கு முன்னால் என் மானத்தை வாங்கி விட்டார் அந்த பிரதர் என்று சொல்லுவோமா, சொல்ல மாட்டோமா? இங்கே பாருங்கள், இவ்வளவு பேரை வைத்துக்கொண்டு இல்லாதது பொல்லாததெல்லாம் சொல் கிறான். இரத்த வெறியன் ஆகிய நீ உன் தீமையிலேயே அழிவாய் என்று சாபம் வேறு விடுகிறான். இவ்வளவு செய்தால் நமக்கு இந்நேரத்திற்கு பிரஷர் 200க்கு மேல் போயிருக்கும். அபிசாய் என்ற போர்வீரன் தாவீதிடம் சொல்கிறான்.* **அப்போது செரூயாவின் மகன் அபிசாய் அரசரிடம் வந்து, "இச்செத்த நாய் என் தலைவராம் அரசரைப் பழிப்பதா? இதோ நான் சென்று அவனது தலையைக் கொய்து எறிய எனக்கு அனுமதி தாரும்" என்றான்** *(2 சாமுவேல் 16:9). நாமாக இருந்தால் என்ன செய்வோம்? ஆனால் தாவீது என்ன சொல்கிறார் பாருங்கள்.* **''இதைப் பற்றி நீங்கள் கவலை**

**கொள்ள வேண்டாம். அவன் பழிக்கட்டும். ஒருவேளை "தாவீதைப் பழி!" என்று ஆண்டவரே அவனுக்குச் சொல்லி யிருந்தால், "இவ்வாறு ஏன் செய்தாய்?" என்று யார் சொல்ல முடியும்?"** *என்றார் (2 சாமுவேல் 16:10). உங்களை யாராவது திட்டினால், ஆண்டவர் அவனை ஏவி இருக்கிறார் என்று நினைத்துக்கொள். உடனே முட்டி போட்டுச் சொல்: இந்தத் திட்டிற்கும், அவமானத்திற்கும் நான் தகுதியானவன் என்று சொல். இதற்கு நான் பாத்திரவான் என்று சொல். ஆண்டவர் அவனை ஏவி இருக்கிறார் என்று தாவீது சொல்கிறார். ஆண்டவருடைய பராமரிப்பு குறித்து நன்றாக அறிந்து கொள்ளுங்கள். அவருடைய அனுமதி இல்லாமல் ஒருவனும் உன்னை திட்ட முடியாது. ஒரு பிரதர் என்னிடம் "நிறைய முறை உங்களிடம் சண்டை போட வேண்டும் என்று வந்திருக் கிறேன். உங்கள் முன்பாக வந்தவுடன் எல்லாம் மறந்து போய் விடும்" என்று சொன்னார். வீட்டிற்குப் போன பிறகுதான் சண்டை போட வேண்டும் என்றுதானே போனோம் என்ற ஞாபகம் வரும். நிறைய தடவை அப்படி வந்திருக்கிறேன் என்றார். ஆனால் அவர் என்னோடு சண்டை போடவே முடியவில்லை. நாம் நினைக்காத ஒரு சிலர் வேண்டுமென்றே கத்தி விட்டு போகிறார்கள். ஒரு சிலரை ஆண்டவர் அனுமதிக்கிறார். இன்னும் சிலரை ஆண்டவர் அனுமதிப் பதில்லை.*

*இன்றைக்கு நிறைய கிறீஸ்தவர்கள் யார் என்ன நினைத்தாலும், பேசினாலும், போகட்டும் என்று நினைப்பது இல்லை. இயேசு வேண்டும் என்று நினைக்கிறவர்கள் அப்படிதான் சொல்ல வேண்டும். பெருமையினால்தான் நிறையக் கிறீஸ்தவர்கள் இயேசு கிறீஸ்துவை தவற விடுகிறார்கள். அவரை இழந்து போகிறார்கள். சக்கேயு இயேசுவைத் தவற விட விரும்பவில்லை. என்னை நேசிக்க ஒருவர் இருக்கிறார். பாவிகளை நேசிக்கக் கூடிய ஒருவர்*

இருக்கிறார். அவரை நான் பார்க்க வேணடும் என்று சக்கேயு நினைத்தார். மற்றவர்களைப் பற்றிக் கவலைப்படவில்லை.

### கோதுமை மணியாய் இருங்கள்

**''கோதுமை மணி மண்ணில் விழுந்து மடியாவிட்டால் அது அப்படியே இருக்கும். அது மடிந்தால்தான் மிகுந்த விளைச் சலை அளிக்கும் என உறுதியாக உங்களுக்குச் சொல்கிறேன்''** (யோவான் 12:24). மடிதல் என்றால் என்ன? உன்னை நீ பூஜ்ஜியமாக மாற்றுவது தான். ஒரு பெரிய புனிதரிடம் ஒரு வாலிபன், "நான் உம்முடைய சீடனாக இருக்க விரும்பு கிறேன்" என்றான். அதற்கு அவர், "நல்லது. முதலில் நான் சொல்வதைச் செய். அந்தக் கல்லறைக்குப் போ! அங்கிருக்கும் பிணத்தைப் பார்த்து அரை மணி நேரம் நன்றாகப் புகழ்ந்து பேசு" என்று சொன்னார். இவன் போய் நன்றாகப் புகழ்ந்து பேசிவிட்டுத் திரும்பி வந்தான். அவர் சொன்னார்: "திரும்ப நீ அந்தக் கல்லறையில் போய் வாய்க்கு வந்தபடி நன்றாகத் திட்டு" என்று சொன்னார். அரை மணி நேரம் திட்டி விட்டுத் திரும்ப வந்தான். அவர் என்ன நடந்தது என்று கேட்டார். ஒண்ணுமே நடக்கவில்லை என்றான். உலகத்தில் நீயும் இப்படி இரு என்று சொன்னார். அவன்தான் சீடன். உலகத் திற்கு மடிதல் என்றால் நீ ஒரு பூஜ்ஜியம். அப்போதுதான் நீ பலன் கொடுக்க முடியும். இன்றைக்கு அப்படி இல்லாத தால்தான் பலன் கொடுக்க முடியவில்லை. ஏன் ஆத்மா ஆதாயம் நடக்கவில்லை? நீ மடிந்துபோய் விட்டேன் என்று சும்மா படுத்துக்கொண்டு யாராவது ஒரு வார்த்தை சொல் வதற்குள் சீறிக்கொள்கிறாய். நீ சாகவில்லை. அடிக்கடி விழித் துக் கொள்கிறாய். உங்கள் வீட்டில் இருப்பவர்கள் எல்லாரும் பார்க்கிறார்கள். நீ சாகவில்லை. இந்தக் கட்டை உயிரோடு தான் இருக்கிறது. என்ன ஜெபத்திற்கு போகிறாய், இவ்வளவு கோபம் வருகிறது? என்று கேட்கிறார்களா இல்லையா?

ஏனென்றால் நீ சாகவில்லை. நீ மடியாமல் இருக்கிறாய். மடிந்தால்தான் பலன் கொடுக்க முடியும். மடியவில்லை என்றால் அதனால் பிரயோஜனமே இல்லை. உன்னை யாராவது திட்டினால் உனக்கு ஏதாவது குறையப் போகிறதா? உன்னைத் திட்டி விட்டு அவர்கள் வேண்டு மானால் சந்தோஷமாக இருந்து விட்டுப் போகட்டும்.

கடவுள் என்ன நினைப்பார் என்று பார்க்காமல், மனிதர்கள் என்ன நினைப்பார்கள் என்று பார்ப்பதுதான் பெருமை. என்னை யாரும் ஏளனமாக நினைக்கக் கூடாது; உயர்வாக நினைக்க வேண்டும் என்று நினைப்பது. மற்றவர்கள் இப்படி பார்ப்பதற்கு நான் தகுதியாக இருக்கிறேனா? யோசித் துப் பாருங்கள்! இயேசு உங்கள் தெருவுக்கு வந்தால் யார் வீட்டில் தங்க விரும்புவார்? நம்முடைய வீட்டிற்கு வரும் அளவுக்கு நம்முடைய உள்ளத்தில் தாழ்ச்சி இருக்கிறதா? உங்களை ஆராய்ந்து பாருங்கள்.

ஒரு வேளை உங்கள் உள்ளத்தில் பெருமை இருக்கு மானால், அந்தப் பெருமையைத் தூக்கி எறிந்து விடுங்கள். இந்தப் பெருமையினால், நாம் ஏன் வியாதியில் கிடக்க வேண்டும்? இந்தப் பெருமையினால் வாழ்நாள் முழுவதும் ஏன் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்க வேண்டும்? சக்கேயு எதைப் பற்றியும் கவலைப்படவில்லை. இயேசுவைச் சந்தித்தார். இயேசு அவர் வீட்டில் தங்கினார். அந்த வீடு ஆசீர்வாதமான வீடாக மாறியது. ஆண்டவர் “இன்று இந்த வீட்டிற்கு மீட்பு உண்டாயிற்று” என்று சொன்னார். இயேசு ஒரு வீட்டைப் பார்த்து இப்படிச் சொல்வாரானால் அந்த வீடு எவ்வளவு ஆசீர் நிறைந்த வீடாக மாறும்!

-------------

## 06. ஆடையாய் அணிந்துகொள்ளுங்கள்

*கடவுள் மனிதனிடத்தில் தாழ்மையை விரும்புகிறார். ஏனென்றால் இயேசுவே உள்ளத்தில் தாழ்மை உள்ளவராக இருந்தார். "நான் கனிவும், மனத் தாழ்மையும் உடையவன்" (மத்தேயு. 11:29). இயேசுவின் உள்ளம் தாழ்மையான ஒரு உள்ளமாக இருந்தது. அவருடைய பிள்ளைகளிடமும் இந்தத் தாழ்மையைத்தான் எதிர்பார்க்கிறார். பிசாசு, அதற்கு நேர் மாறாக, ஆணவமிக்கவனாக இருக்கிறான். அதைப் பின்பற்றுகிறவர்களும் அதே ஆணவமிக்கவர்களாக இருக் கிறார்கள்.*

*நீங்கள் செய்யக்கூடிய நற்செயலை, உபவாசத்தை, ஜெபத்தை, மற்றவர்கள் காணும்படி செய்யக்கூடாது. இதைத் தான் இயேசு உன் வலது கை செய்வதை இடது கை அறியக் கூடாது என்று சொல்கிறார். நாம் நல்ல காரியங் களை மற்றவர்களுக்குச் செய்யும்போது, நான் இப்படி எல்லாம் செய்திருக்கின்றேன் என்று அதைக் கொண்டு பெருமைப்படக் கூடாது. ஏனென்றால் நம்முடைய நற்செயல்கள் நமது எந்தப் பாவத்தையும் மன்னிப்பதற்குப் போதுமானது அல்ல.*

*கடவுள்மீது உள்ள அன்பினால், இந்த நற்செயல் களைச் செய்கிறோம். இயேசு நம்மீது உள்ள அன்பினால் தம்மையே கையளித்தார். பெற்றோர் பிள்ளைகள் மீது அன்பு வைக்கிறதினாலே, அந்தப் பிள்ளைகளுக்காக எவ்வளவோ தியாகங்களை செய்கிறார்கள். அதே போலத்தான், அன்பு சில நற்செயல்களைச் செய்ய வைக்கும். ஆனால் அது மற்றவர்களிடம் சொல்வதற்கோ, விளம்பரப்படுத்து வதற்கோ, நீங்களே உங்களைப் பற்றிப் பெருமைப்படுவதற்கோ அல்ல.*

*பலரின் பிரச்சினை என்னவென்றால், தேவன் அவர்களை உயர்த்துவதை விரும்புவதை விட, தாங்களாகவே தங்களை உயர்த்திக்கொள்ளப் பார்க்கிறார்கள்.*

**''இளைஞர்களே! நீங்கள் முதியவர்களுக்குப் பணிந் திருங்கள்''** *(1 பேதுரு 5:5,6). உங்களை விடப் பெரியவர் களுக்குப் பணிந்து நடந்து கொள்ளுங்கள். வாலிப வயது, ஓர் ஆணவம் நிறைந்த வயதுதான். ஆனாலும் விவிலியம் இந்த வாலிப வயதில் முதியவர்களுக்குப் பணிந்திருங்கள் என்று சொல்கிறது.* **''ஒருவர் மற்றவரோடு பழகும்போது, எல்லாரும் மனத் தாழ்மையை ஆடையாய் அணிந்திருங்கள்''** *(1 பேதுரு 5:5). வாலிப வயதில் பல காரியங்களைக் குறித்து அவர்கள் பெருமைப்படுவார்கள். ஆனால் விவிலியம் ஒருவரோடு மற்றவர் பழகும்போது, மனத் தாழ்மையை ஆடையாய் அணிந்து கொள்ளுங்கள் என்று சொல்கிறது. தாழ்ச்சி உள்ளவர் களாக நடந்துகொள்ளுங்கள். பலரோடு பழகுகிறோம். ஆனாலும் தாழ்மை உள்ளவர்களாக நடந்து கொள்ளுங்கள்.*

*பல வேதனைகளுக்குக் காரணம் பெருமையே. எதைக் குறித்துப் பெருமைப்படுகிறார்கள்? தங்களுடைய ஜெபங் களைக் குறித்து. நான் நல்லா ஜெபம் செய்தேன் என்று பெருமைப்படுகிறார்கள். உபவாசம் இருந்தால், பரிசேயர் களைப் போலப் பெருமைப்படுகிறார்கள். அடுத்தவர் களுக்கு நன்மை செய்தால் பெருமைப்படுகிறார்கள். இதுவெல் லாம் ஒன்றுமில்லை. இதை வைத்துக்கொண்டு பழகக் கூடாது.*

*நாம் மற்றவர்களிடம் பழகும்போது, மனத் தாழ்மையை அணிந்துகொண்டு பழக வேண்டும். நாம் செய்கிற உதவிகளைக் கொண்டு பழகக்கூடாது. நீங்கள் மற்றவர் களுக்குச் சில உதவிகளைச் செய்திருக்கலாம்; சில நல்ல காரியங்களைச் செய்திருக்கலாம். ஆனால் அதை முன்னால்*

*வைக்காதீர்கள். மனத் தாழ்மையை ஆடையாக அணிந்து கொள்ளுங்கள்.*

*நற்செயல்கள் புரிவதற்குத் தேவன் நம்மைத் தெரிந்து கொண்டார் (எபே. 2:10). அவர் அந்த மனதைக் கொடுத் திருக்கிறார். அந்த வாய்ப்புகளைக் கொடுத்திருக்கிறார். கடவுள் வாய்ப்புகளைக் கொடுக்காவிட்டால், நாம் உதவ முடியாது. உங்களுக்கு உடல் நன்றாக இல்லாவிட்டால், உதவி செய்ய முடியாது. உங்களிடம் பணம் இல்லாவிட்டால் கொடுக்க முடியாது. இதெல்லாம் கடவுள் கொடுத்திருக்கிறார். இதில் பெருமைப்படுவதற்கு ஒன்றுமில்லை. இவற்றை யெல்லாம் தந்ததற்காக, கடவுளுக்கு நன்றி! என்று சொல் லுங்கள்.*

*எத்தனையோ பேர் பணம் வைத்திருக்கிறார்கள். ஆனால் எல்லாருக்கும் உதவி செய்ய மனம் வரவில்லை. பலருக்கு உடல் நன்றாக இருக்கிறது. ஆனாலும், கஷ்டப்படுகிறவர்களுக்கு உதவி செய்வதற்கு மனம் வரவில்லை. அப்படி ஒருவேளை ஆண்டவர் உங்களுக்கு அந்த மனதைக் கொடுத்தால், அதில் பெருமைப்படுவதற்கு ஒன்றுமில்லை. மாறாக, தேவனை மகிமைப்படுத்துங்கள்.*

*அதனால்தான் நீ ஜெபம் செய்யும்போது கூட, உன் அறைக்குள் சென்று, கதவைத் தாழிட்டுக் கொண்டு ஜெபி; அது யாருக்கும் தெரியாது; மறைவாக இருக்கும். மறைவாக இருக்கிறதைக் காண்கிற பிதா வெளிப்படையாகப் பதில் கொடுப்பார் என்கிறார். மற்றவர்கள் பார்க்க வேண்டும் என்று ஜெபிப்பது அவசியமில்லை. நீங்கள் ஜெபிக்காத போதும், இயேசு நமக்காக உயிரைக் கொடுத்தார். நாம் நல்லவர்களாக இல்லாமல், பாவியாக இருந்தபோதும், இயேசு நமக்காக ஜீவனைக் கொடுத்தார் (உரோ. 5:8). அப்படி இருக்கும்போது, நாம் செய்யும் நல்ல காரியங்களைக்*

குறித்து எப்படிப் பெருமை பாராட்டுவது? அதனால்தான் பலர் வருத்தப்படுகிறார்கள். அவர்களுடைய ஜெபம் கேட்கப் படாவிட்டால் நொந்து போய்விடுகிறார்கள். ‘‘இவ்வளவாக ஜெபித்தேனே! முழங் காலில் இருந்தேனே! இவ்வளவாகச் செய்தேனே! ஆண்டவர் கேட்கவில்லையே!’’ என்று. இதையெல்லாம் வைத்து, ஆண்டவர் ஜெபத்தைக் கேட்பது இல்லை. அவருடைய இரக்கத்தினாலும், பேரன்பினாலும் மனமிரங்கி நமக்குச் செய்கிறார். நம்முடைய தகுதியைப் பார்த்து உதவி செய்வது இல்லை. தகுதியற்ற நிலையில் நமக்குத் துணை செய்கிறார். ஆகையினால்தான் தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுகிறான்.

தன்னையே தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுகிறான். ஒரு மனிதன் உயர்வடைய வேண்டுமானால், முதலாவது, தன்னைத் தாழ்த்த வேண்டும். பலர் இன்று ‘‘ஆண்டவர் என்னை உயர்த் தட்டும், நான் தாழ்ந்து போவேன்’’ என்று சொல்கிறார்கள். அப்படி அல்ல. முதலாவது, நாம் நம்மைத் தாழ்த்த வேண்டும். அப்போது தேவன் நம்மை உயர்த்துவார்.

-------------

## 07. யார் செய்தது பெரிய பாவம்?

*நம்முடைய பாவங்களை ஏற்றுக்கொள்வதற்குக் கூட தாழ்மை தேவைப்படுகிறது. தாழ்ச்சி இல்லாவிட்டால் நம்முடைய குற்றங்களையோ, குறைகளையோ கூட நாம் ஏற்றுக்கொள்ள முடியாது. இஸ்ரேல் தேசத்திலே, முதல் இரண்டு அரசர்களைக் குறித்து நாம் விவிலியத்தில் வாசிக்கிற போது, ஒருவர் சவுல், அடுத்தவர் தாவீது. சவுலும் பாவம் செய்கிறார்; தாவீதும் பாவம் செய்கிறார். கடவுள் சொன்ன கட்டளையை மீறி விடுகிறார்கள்.*

*சவுலும் தன்னுடைய பாவத்தை உணரவில்லை. தாவீதும் தன்னுடைய பாவத்தை உணர்ந்து மனம் வருந்தவில்லை. இரண்டு பேரிடமும் ஆண்டவர் தீர்க்கதரிசிகளை அனுப்பு கிறார். சவுலிடம் சாமுவேல் தீர்க்கதரிசி பேசுகிறார். “என்ன காரியம் செய்தாய்?” என்றார். சவுலோ இப்படிச் செய்து விட்டோமே என்று வருத்தப்படவில்லை. நான் ஒன்றும் பெரிய தவறு செய்யவில்லை என்று நினைத்தான் (1 சாமுவேல் 15:19-20). அதுதான் அவனுடைய பெருமை. அவனுடைய பாவத்தை அவன் உணரவும் இல்லை, மனம் வருந்தவும் இல்லை. தேவ சமூகத்தில் அதற்காகத் தன்னைத் தாழ்த்தவும் இல்லை. நடந்தது என்ன? ஆண்டவர், சவுலை நான் தள்ளி விட்டேன் என்று சொன்னார்.*

### யார் செய்தது பெரிய பாவம்

*தாவீது செய்ததுதான் மிகப் பெரிய பாவம். கடவுள் நீ பெரிய பாவம் செய்திருக்கிறாயா, சின்னப் பாவம் செய்திருக் கிறாயா என்று பார்ப்பது இல்லை. உன்னுடைய உள்ளத்தில் தாழ்மை இருக்கிறதா? அல்லது மேட்டிமை இருக்கிறதா? என்று பார்க்கிறார். சவுல் தன்னைத் தாழ்த்தவில்லை. மாறாக, பெருமைப்படவே விரும்பினான். தான் செய்த குற்றத்தை*

அறிக்கை செய்யவும் இல்லை. ஐயோ இப்படிச் செய்து விட்டேனே என்று சொல்லவுமில்லை. ஆனால் தாவீது அப்படி இல்லை. தாவீதினிடத்தில் நாத்தான் போய் சொன்ன போது, ஐயோ நான் பாவம் செய்தேன் என்று தேவ சமூகத்தில் ஓடிப் போய் விழுந்தார்.

பல நேரங்களில் நாம் தவறுகள் செய்கிறபோது, கடவுள் நமக்கு உணர்த்துகிறார். சில நேரங்களில் அவருடைய ஊழியர்களை வைத்துப் பேசுகிறார். சிலர் தங்களுடைய தவறுகளை ஏற்றுக்கொண்டு, மனம் மாறுகிறார்கள். தேவ சமூகத்தில், ‘‘ஐயோ, இப்படி நடந்து விட்டேனே; கடவுளுக்கு விரோதமாக நடந்து விட்டேனே; ஆண்டவருக்குப் பிடிக்காத இந்தக் காரியத்தைச் செய்து விட்டேனே’’ என்று தங்களைத் தாழ்த்துகிறார்கள். இன்னும் சிலர், ‘‘என்னை இப்படிச் சொல்லி விட்டார்களே என்று, தங்களுடைய பெருமை மிகுதியினாலே தங்களைத் தாழ்த்த முடியாமல் போய் விடுகிறார்கள். எல்லா மனிதர்களும் பாவம் செய்யக் கூடிய வர்கள்தான். யாரிடத்திலும் பாவம் இல்லை என்று சொல்ல முடியாது.

நம்முடைய வாழ்க்கையில் ஒரு தவறு வருகிறபோது, உடனே கடவுளுடைய சமூகத்தில் நம்மைத் தாழ்த்த வேண்டும். அதுதான் மேன்மை அடைவதற்கு வழி; அதுதான் கடவுளுடைய அருளைப் பெறுவதற்கு வழி; அதுதான் திரும்ப வும் தேவனுடைய ஆசீர்வாதங்களை அனுபவிப்பதற்கு வழி. பலரால் அப்படித் தாழ்த்த முடியவில்லை. ஆண்டவர் சவுலை முதன்முதலாக இஸ்ரேல் தேசத்திற்கு அரசனாக உயர்த்தினார். அவன் மேல் தம்முடைய ஆவியை ஊற்றுகிறார். இறைவாக்கு உரைக்கச் செய்கிறார். கடவுள் இப்படி எல்லாம் செய்தும் கூட, தான் கடவுளது கட்டளையை மீறிப் பாவம் செய்தபோது, சவுல் அரசனால் தன்னைத் தாழ்த்த முடியவில்லை.

*ஆகையினால் ஆண்டவர், "சவுலை அரசனாக்கியதற்காக வருந்துகிறேன்; சவுலைத் தள்ளி விட்டேன்" என்று சொன்னார் (1சாமுவேல். 15:11).*

*தாவீது பாவம் செய்தபோது, ஆண்டவர் அவரைத் தள்ளி விடவில்லை. தாவீது மனங்கசந்து, ஆண்டவருடைய சமூகத்தில் அழுது புலம்புகிறார்; கெஞ்சுகிறார்.*

*சவுல் பாவம் செய்தபோது, சாமுவேல் தீர்க்கதரிசி சொன்ன பிறகும், சவுல் சொன்ன வார்த்தை என்ன? நீர் வரா விட்டால் ஜனங்கள் என்னை மதிக்க மாட்டார்கள். ஆகையினால் என்னோடு வாரும்; என்னைப் பெருமைப்படுத்தும் என்று கூப்பிடுகிறார் (1 சாமுவேல் 15:30). ஆனால் தாவீது அப்படிச் சொல்லவில்லை. மக்கள் தன்னைப் பெருமைப் படுத்த வேண்டும் என்று நினைக்கவில்லை. அரச பதவி தம்மை விட்டுப் போய்விடக்கூடாது என்றும் நினைக்கவில்லை.* **"ஆண்டவரே, உம்முடைய தூய ஆவியை என்னிடமிருந்து எடுத்து விடாதேயும்"** *(திருப்பாடல் 51:11) என்றார். ஏனென்றால், தாவீது சவுலுடைய வாழ்க்கையைப் பார்த்தவர்; சவுல் தன்னைத் தாழ்த்த முடியாமல் போனபோது, அவனிடமிருந்த தூய ஆவி எடுக்கப்பட்டு, ஓர் அசுத்த ஆவி சவுலை அலைக் கழிக்க ஆரம்பித்தது. இதைப் பார்த்த தாவீது, தேவ சமூகத்தில் தன்னை எவ்வளவு தாழ்த்த முடியுமோ, அவ்வளவு தாழ்த்து கிறார். "ஆண்டவரே, பாவ நிலையில் நான் பிறந்தேன். என் பாவங்கள் எப்போதும் என் கண்களுக்கு முன்பாக இருக்கிறது. ஒரு தூய உள்ளத்தை எனக்குத் தாரும். உறுதி தரும் ஆவியைக் கொடும். நீர் எனக்குக் கொடுத்த பரிசுத்த ஆவியை என்னிடம் இருந்து எடுத்து விடாதேயும்" என்று கெஞ்சுகிறார் (திருப் பாடல் 51). ஆகையினால்தான் ஆண்டவர் தாவீதை மறுபடி யும் தூக்கி உயர்த்துகிறார்.*

*விவிலியம் அதைத்தான் சொல்கிறது. தன்னைத் தானே*

*தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுவான்; தன்னைத்தானே உயர்த்து கிறவன் தாழ்த்தப்படுவான். குடும்பங்களில் கூட இன்றைக்குக் கணவனுக்கு மனைவியினிடத்தில் தாழ்த்த முடியவில்லை. மனைவிக்கு, கணவனிடத்தில் தாழ்த்த முடியவில்லை. ஒருவர் மற்றவரிடம் மன்னிப்புக் கேட்பதற்கு மிகவும் யோசிப்பார்கள்.* **பலருடைய வாழ்க்கையில் இருக்கக் கூடிய பிரச்சினைக்குக் காரணம் என்னவென்றால், எங்கே தாழ்த்த வேண்டுமோ, அங்கே தாழ்த்த முடியாமல் இருப்பதுதான்.** *பிள்ளைகள் பெற்றோரிடம் மன்னிப்புக் கேட்பதற்குக் கூட அவ்வளவு யோசிப்பார்கள். சில பிள்ளைகள் மன்னிப்புக் கேட்பதற்குப் பிடிவாதம் செய்வார்கள். அவர்களுக்கு மனது வர மாட்டேன் என்கிறது.*

### தாழ்மைக்கான எளிய வழி

*திருத்தந்தை சொல்கிறார்: அடிக்கடி இந்த இரண்டு வார்த் தைகளைப் பயன்படுத்துங்கள். அவை என்ன வார்த்தைகள்? "மன்னிக்கவும்" (sorry) - இந்த வார்த்தை நம்மைத் தாழ்த்துவது. மற்றொரு வார்த்தை "தயவு செய்து" (please). இந்த இரண்டு வார்த்தைகளும் தாழ்ச்சியைக் குறிக்கின்றன. பலருக்கு இப்படிச் சொல்லத் தெரியவில்லை. "தயவு செய்து செய்" என்று சொன்னால், வேலை முடிந்து விடும். அப்படிச் சொல் லாமல் கத்தினால், "நீ கத்திக்கொண்டே இரு" என்று சென்று விடுவார்கள். தயவு செய்து என்ற ஒரு வார்த்தையில் வேலை முடிந்து விடுகிறது. அதனால்தான் ஆண்டவர் சொல்கிறார்: தன்னைத்தானே தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுவான். உயர்த்து கிறவனோ தாழ்த்தப்படுவான்.*

---------

## 08. இழந்ததை மீண்டும் பெற்றுக்கொள்ளுதல்

*விவிலியத்தில் மனாசே என்ற ஓர் அரசனைக் குறித்து வாசிக்கிறோம். இந்த அரசன் மிகவும் பொல்லாதவனாக இருந் தான். கடவுளுக்கு விருப்பம் இல்லாத எல்லாக் காரியங்களை யும் இஸ்ரயேல் தேசத்திலே அரங்கேற்றினான். 2 குறிப்பேடு 33-ல் வாசிக்கிறபோது, இந்த ராஜா செய்த பாவங்கள் எல்லாம் அதிலே எழுதப்பட்டு இருக்கிறது.* **என்னென்ன அக்கிரமங்களை ஆண்டவர் அருவருத்தாரோ, அதையெல்லாம் அவன் செய்தான். (1) மனாசே அரசனான போது அவனுக்கு வயது பன்னிரண்டு.** *பன்னிரண்டு வயதிலேயே ஆண்டவர் அவனை உயர்த்தி அரச னாக்கினார். அவன் எருசலேமில் ஐம்பத்தைந்து ஆண்டுகள் ஆட்சி செய்தான். மனாசே 67 வயது வரை எருசலேமில் ஆட்சி செய்தான். (2)* **இஸ்ரயேல் மக்களுக்கு முன்பாக ஆண்டவரால் துரத்தி யடிக்கப்பட்ட நாடுகளின் அருவருக்கத்தக்க செயல்களைப் பின்பற்றி அவனும் ஆண்டவரின் பார்வையில் தீமையானதையே செய்தான். (3) ஏனெனில், அவன் தன் தந்தை எசேக்கியா உடைத்தெறிந்த பலிபீடங்களை மீண்டும் கட்டியெழுப்பினான்.** *கடவுளுக்கு எதெல்லாம் விருப்பம் இல்லை என்று எசேக்கியா உடைத்தாரோ, அதையெல்லாம் மீண்டும் கட்டியெழுப்பி னான். பாகாலுக்குப் பலி பீடங்களையும், அசேராக் கம்பங் களையும் நிறுவி, வான் படைகளைப் பணிந்து தொழுதான். (4)* **“எனது பெயர் எருசலேமில் என்றென்றும் விளங்கும்” என்று சொன்ன ஆண்டவரின் இல்லத்தில் அவன் பொய் தெய்வங் களுக்குப் பலிபீடங்களை எழுப்பினான். (5) ஆண்டவரது இல்லத்தில் மண்டபங்களிலும் வான்படைகளுக்கே பலிபீடங் களைக் கட்டினான். (6) பென் இன்னோம் பள்ளத்தாக்கில் அவன் தன் புதல்வரை நெருப்பில் சுட்டெரித்துப் பலியாக்கினான்.**

*மனாசே தன்னுடைய பிள்ளைகளைக் கூட பசாசுக்குப் பலியிடுகிறான். கடவுள் “செய்யக் கூடாது” என்று சொன்ன*

*எல்லா அருவருப்புகளையும் செய்கிறான். கடவுளுக்கு விரோதமான காரியங்கள், பிசாசை வழிபடுதல் போன்ற காரியங்களைச் செய்கிறான். பில்லி சூனியங்களையும் செய்கிறான். அந்த தேசம் முழுவதும் பீடங்களை எழுப்பி, கடவுளுக்கு விரோதமான காரியங்களைச் செய்கிறான்.*

(10) **ஆண்டவர் மனாசேயுடனும், மக்களுடனும் பேசிய போதிலும், அவர்கள் அதற்குச் செவி கொடுக்கவில்லை.** *ஆண்டவர் தம்முடைய தீர்க்கதரிசிகளை அனுப்புகிறார். ஒரு மனிதன் தவறு செய்கிறபோது, ஆண்டவர் தம்முடைய தீர்க்க தரிசிகளை அனுப்புகிறார். ஏன் அனுப்புகிறார்? அறியாமை யினால்தான் செய்தேன் என்று அவன் சொல்லக்கூடாது என்பதற்காக, ஆண்டவர் மனாசேயுடனும், மக்களுடனும் பேசுகிறார். ஏனென்றால் ராஜா தவறு செய்தவுடன் மக்களும் சேர்ந்து தவறு செய்கிறார்கள். அதனால் ஆண்டவர் தீர்க்கதரிசிகளை அனுப்பி மனாசேயுடனும், மக்களுடனும் பேசுகிறார். ஆனால் யாரும் செவி கொடுக்கவில்லை.* *(11)* **ஆதலால் ஆண்டவர் அசீரிய மன்னனின் படைத் தலைவர்களை அவர்களுக்கு எதிராக வரச் செய்தார். அவர்கள் மனாசேயைச் சிறைபிடித்துக் கொக்கிகள் இட்டு, வெண்கலச் சங்கிலிகளால் கட்டி, பாபிலோனுக்கு இழுத்துச் சென்றனர்.** *ஒரு ராஜாவைச் சங்கிலியால் கட்டி இழுத்துச் செல்கிறார்கள்.* *(12)* **அங்கே அவன் துன்புறுத்தப்பட்டபோது, தன் கடவுளாம் ஆண்டவரை நோக்கி மன்றாடி, தன் மூதாதையரின் கடவுள் முன் மிகுந்த வருத்தமுடன் தன்னையே தாழ்த்தினான்.** *அப்போது தான் மனாசேக்குப் புத்தி வருகிறது. தீர்க்கதரிசிகள் சொன்னது எல்லாம் நினைவுக்கு வருகிறது. அவர்கள் கூறியது அனைத்தும் உண்மை; தன் தகப்பன் எசேக்கியா வழிபட்ட தெய்வம்தான் உண்மையான தெய்வம் என்று சிறைச்சாலையில் சித்திரவதை அனுபவிக்கும்போது, தன்னைத் தாழ்த்தி, தேவனை நோக்கிக் கூப்பிட ஆரம்பித்தான். ஆண்டவருக்கு*

முன்பாகத் தன்னைத் தாழ்த்துகிறான். எப்படித் தாழ்த்துவான்? கை கால்களில் சங்கிலியால் கட்டப்பட்டுள்ளது.

பலர் தாழ்ச்சி என்றால், நெடுஞ்சாண்கிடையாக விழுந்து எழுந்தால், அதுதான் தாழ்ச்சி என்று நினைக்கிறார்கள். அதுவல்ல தாழ்ச்சி. இந்த அரசனின் கை கால்களைக் கட்டி வைத்திருந்தனர். அவன் எப்படி நெடுஞ்சாண்கிடையாக விழ முடியும்? விழ முடியாது. விவிலியத்தில் கடவுளுக்கு முன்பாக மனாசே தன்னையே தாழ்த்தினான் என்று போடப்பட்டுள்ளது. இவன் செயல்கள் அனைத்தும் கெட்டது. அது ஆண்டவருடைய பார்வையில் அருவருப்பானது. அதனால்தான் மனாசேக்குத் தீமைகள் வந்தன. இதற்குப் பின், அவன் தேவனிடத்தில் தன்னைத் தாழ்த்தி ஜெபிக்கிறான். அப்படித் தாழ்த்தும்போது என்ன நடக்கிறது? (13) **ஆண்டவர் அவன் மீண்டும் தம்மைக் கெஞ்சி மன்றாடியதால், அவனது வேண்டுதலைக் கேட்டார். அதனால் எருசலேமுக்கும், நாட்டிற்கும் அவன் திரும்பி வருமாறு செய்தார். இதனால் ஆண்டவரே கடவுள் என்று மனாசே அறிந்து கொண்டான்.** மனாசே பொல்லாதவனாக இருந்தாலும் கூட, தன்னுடைய வேதனையில் தன்னைத்தானே தாழ்த்துகிறான்.

தாழ்மை இழந்து போன நன்மைகளை மீண்டும் பெற்றுத் தரும்.

தாழ்மை இழந்து போன சுகத்தைத் திரும்பப் பெற்றுத் தரும்.

தாழ்மை இழந்து போன ஆசீர்வாதத்தைத் திரும்பப் பெற்றுத் தரும்.

தாழ்மை இழந்து போன உங்கள் பதவியைத் திரும்பப் பெற்றுத் தரும்.

இன்று நிறைய கிறீஸ்தவர்கள், கடவுளுக்கு முன்பாகத் தங்களைத் தாழ்த்துவது என்னவென்று அறியாமல்

இருக்கிறார்கள். ஆண்டவருக்கு முன்பாக நம்மைத் தாழ்த்துவது என்றால் என்ன? யூதர்களுடைய வாழ்க்கையில் ஏன் உபவாசம் இருந்தார்கள் என்றால், தங்களைத் தாழ்த்து வதற்குத்தான். தங்களைத் தாழ்த்துவதற்கு அடையாளமாக, சாக்கு உடை உடுத்திக்கொண்டு, சாம்பலைத் தலையில் போட்டுக்கொண்டு, உபவாசமிருந்து, ‘‘நான் இந்தக் குப்பைக்கும், தூசிக்கும் சமம்’’ என்று தங்களையே தாழ்த்தி னார்கள். தாழ்ச்சியின் அடையாளமாக இதைச் செய்தார்கள். ஆனால் உபவாசம் இருப்பதைக் கூட பெருமையாக நினைத்தார்கள். ஆனால் முக்கியமான மனத்தாழ்மை என்ற புண்ணியம் அவர்கள் உள்ளத்திலில்லை. இங்கே மனாசே தன்னைத் தாழ்த்தினான் என்று வேதாகமத்தில் வாசிக்கிறோம்.

மனாசே நிறைய தவறுகள் செய்தான். தன் தந்தை எசேக் கியாவைப் போன்று தான் நடக்கவில்லையே என்று அழுதான். ஆண்டவரை நோக்கிக் கெஞ்சி மன்றாடினான். அப்போது, ஆண்டவர் அவனுடைய தாழ்மையைப் பார்த்து இரங்குகிறார். ஆண்டவர் அவனுடைய எல்லாப் பாவங்களையும் மன்னித்து, அவன் இழந்து போனவற்றை அவனுக்குத் திரும்பக் கொடுக்கிறார்.

**முதலில் வருவது இறுமாப்பு; அதனை அடுத்து வருவது அழிவு** (நீதிமொழிகள் 18:12). ஒரு மனிதனுடைய வாழ்க்கை யில் பெருமைதான் அவனுக்கு அழிவைக் கொண்டு வருகிறது. முதலில் இறுமாப்பு வரும்போதே அழிவு வருவது இல்லை. ஆகையினால்தான் பலர் இறுமாப்பில் இருக்கிறார்கள். ஆனாலும் அந்த இறுமாப்பு அவனுக்கு இடைஞ்சல் கொண்டு வரும். அழிவைக் கொண்டு வரும். பலரும் அதை உணராமல் இருக்கிறார்கள். அதைக் கண்டுகொள்வதும் இல்லை. நாளாக, நாளாக, அந்தப் பெருமை அவர்களுக்கு அழிவைக் கொண்டு வருகிறது.

**மேன்மை அடைய தாழ்மையே வழி** *(நீதிமொழிகள் 18:12). உங்கள் வாழ்வு மேன்மை அடைய விரும்பினால், தாழ்மைதான் வழி. உங்கள் வாழ்க்கையில் மேன்மை பெற விரும்பினால், உங்களைத் தாழ்த்துங்கள். அப்போது தேவன் உங்களை உயர்த்துவார். தாழ்ச்சி இல்லை என்பதால்தான் பலருடைய வாழ்க்கையில் கண்ணீர். தாழ்மை தேவனுக்குக் கீழ்ப்படியும்; இயேசு, ''நான் இருதயத்தில் சாந்தமும், தாழ்ச்சியும் உள்ளவர்'' என்று சொன்னார்.*

-----------

## 09. உள்ளங்களைத் தூய்மைப்படுத்துங்கள்

*இறைவார்த்தையை விவிலியத்தில் வாசிக்கிறபோது, அல்லது இறைச் செய்திகளைக் கேட்கிறபோது, நம்முடைய குற்றங்கள், தவறுகள் உணர்த்தப்படுகின்றன. அப்படி உணர்த் தப்படுகிற போது, கடவுளுடைய பிள்ளைகள் என்ன செய்ய வேண்டும்? தேவனுக்கு முன்பாகத் தங்களைத் தாழ்த்த வேண்டும். இதைத்தான் தாவீது செய்கிறார். தாவீதுக்குத் தம்முடைய பாவம் உணர்த்தப்பட்டபோது, "ஐயோ, நான் பாவம் செய்தேன்" என்று ஆண்டவருடைய சமூகத்தில் விழுந்து அழுதார்.*

*பேதுரு மூன்று முறை இயேசுவை மறுதலித்துப் பாவம் செய்தார். இயேசுவைத் தெரியாது என்று சத்தியம் பண்ணு கிறார். சேவல் இரண்டாம் முறை கூவிய போது, இயேசு சொன்னதை நினைவுகூர்ந்தார். பேதுரு செய்த பாவங்கள் உணர்த்தப்பட்டன. அப்போது* **அவர் மனம் உடைந்து அழுதார்** *(மத்.26:75; மாற்கு. 14:72). ஆகையால் இயேசு பேதுருவைத் தேடி வந்தார். மரிய மதலேனாளைக் குறித்து விவிலியத்தில் வாசிக்கிறோம். அவள் ஒரு பாவ வாழ்க்கை வாழ்கிறாள். இயேசுவைச் சந்தித்த பிறகு, பாவ உணர்வு அடைகிறாள். "ஐயோ, இப்படிப் பாவம் செய்து விட்டேனே!" என்று இயேசுவின் பாதத்தருகில் வந்து மனது உடைந்து அழுகிறாள்; கண்ணீரால் அவர் பாதத்தைக் கழுவுகிறாள்.*

*தேவனுக்கு முன்பாகத் தாழ்த்துவது என்றால் என்ன? ஐயோ, இப்படிச் செய்து விட்டேனே என்று மனம் உடைந்து அழுவதுதான். இதைத்தான் யாக்கோபு 4:8ல்,* **"கடவுளை அணுகிச் செல்லுங்கள். அவரும் உங்களை அணுகி வருவார். பாவிகளே, உங்கள் கைகளைத் தூய்மையாக்குங்கள்; இரு மனத்தோரே, உங்கள் உள்ளங்களைத் தூய்மைப்படுத்துங்கள்"** *என்று வாசிக்கிறோம்.*

எப்போது நம் உள்ளத்தில் ஒரு பாவம் இருக்கிறது என்று உணர்கிறோமோ, அடுத்தது, நாம் கழுவப்பட வேண்டும். **''உங்கள் நிலையை அறிந்து துயருற்றுப் புலம்பி அழுங்கள்''** (யாக்கோபு. 4:9). எந்த நிலையில் தேவன் நம்மை வைத்திருந்தார், ஆனால் இப்படி ஆகி விட்டோமே, இப்படி பாவத்தில் விழுந்துவிட்டோமே, பசாசுக்கும், தீமைக்கும் இடம் கொடுத்து விட்டோமே, ஒரு பொய் சொல்லி விட்டோமே, தவறான ஒரு பார்வை பார்த்து விட்டோமே, ஒரு கெட்ட சிந்தனைக்கு இடம் கொடுத்து விட்டோமே, பணத்திற்கு ஆசைப்பட்டு விட்டோமே என்று அந்தப் பாவத்தை உணர்ந்து துயருற்றுப் புலம்பி அழுங்கள் என்று யாக்கோபு சொல்கிறார். இதைத் தான் பேதுருவும், மரிய மதலேனாளும் செய்கிறார்கள்.

ஆனால் பலர் ''இது ஒன்றும் பெரிய பாவம் இல்லை'' என்று தங்களுடைய பாவங்களைச் சாதாரணமாக நினைக் கிறார்கள். பாவம் தேவனுக்குப் பகையானது. பாவத்தை தேவன் அருவருக்கிறார். பாவம் உங்கள் வாழ்க்கையில் வரும் போது, தேவ சமூகத்தில், ''ஐயோ, ஆண்டவரே! உமக்கு எதிராகப் பாவம் செய்து விட்டேனே!'' என்று சொல்லிப் புலம்புங்கள்.

ஒரு ஊழியர், ''வாலிப வயதில், சில பாவங்கள் என்னிடத் தில் இருந்தன. பாவம் என் வாழ்க்கையில் வந்து விட்டால், இரவு முழுவதும் ஆண்டவருடைய சமூகத்தில் அழுவேன். என் தலையணை கண்ணீரால் நனைந்து போயிருக்கும். ஆண்டவரே, என்னைப் பரிசுத்தமாக்கும் என்று கெஞ்சுவேன். பல இரவுகள் நான் இப்படி அழுதிருக்கிறேன். ஆண்டவர் எனக்கு அந்தப் பரிசுத்தத்தைக் கொடுத்தார்'' என்று சொல்கிறார். நாம் நம்மைத் தாழ்த்தும்போது, ஆண்டவர் நம்மை உயர்த்துகிறார்.

பாவம் செய்து விட்டால், எனக்கென்ன என்று இருப்பது அல்ல; மாறாக, பாவம் செய்தவுடனே ஆண்டவர் சமூகத்தில் நம்மைத் தாழ்த்த வேண்டும். **"உங்கள் நிலையை அறிந்து, துயருற்றுப் புலம்பி அழுங்கள்; உங்கள் சிரிப்பு புலம்பலாகவும், மகிழ்ச்சி ஆழ்துயரமாகவும் மாறட்டும்"** (யாக்கோபு 4:9). ஆதித் திருச்சபையில் யாராவது பாவம் செய்து விட்டால், அவர்கள் சபைக்கு உள்ளே வருவதற்கு அனுமதி இல்லை. வெளியே வாசலில் நிற்க வேண்டும். இறைமக்கள் ஆலயத்திற்குள் வருவார்கள். பாவம் செய்தவர்கள், வெளியே நின்று கொண்டு அவர்களிடம், "நான் பாவம் செய்து விட்டேன்; எனக்காக ஜெபியுங்கள்" என்று சொல்லி, வெளியே உட்கார்ந்து, அவர்களுடைய மிதியடிகளை எல்லாம் துடைப்பார்களாம். ஆறு மாதங்கள் கழித்தோ, ஒரு வருடம் கழித்தோ, ஆயர் (பிஷப்) அங்கே வரும்போது தான் அவர்களுக்குப் பாவ மன்னிப்புக் கொடுத்து, உள்ளே சேர்த்துக் கொள்வார்களாம். ஆகையினால், அங்கே பரிசுத்தம் இருந்தது.

இன்றைக்குப் பாவம் செய்து விட்டால், அதைக் குறித்து மிகச் சாதாரணமாக நினைக்கிறார்கள். ஒரு பாவம் மன்னிக்கப் பட வேண்டுமானால், (அந்தப் பாவம் சிறியதாக அல்லது பெரியதாக இருக்கலாம்) இயேசு கிறீஸ்துவின் இரத்தம் சிந்தப் பட்டாலொழிய, அந்தப் பாவம் மன்னிக்கப்பட முடியாது. **இரத்தம் சிந்துதல் இல்லாமல் பாவ மன்னிப்பு இல்லை** (எபிரேயர் 9:22). அற்பப் பாவமாக இருந்தாலும், இயேசுவின் இரத்தம் சிந்தப்பட்டுத்தான் பாவம் மன்னிக்கப்படுகிறது. உங்கள் வாழ்க்கையில் பாவம் செய்கிறீர்களா? முதலாவது தெரிந்து கொள்ளுங்கள். நீங்கள் இயேசுவை இரத்தம் சிந்த வைக் கிறீர்கள். அங்கே தாழ்ச்சி உள்ளவர்கள் என்ன செய்கிறார்கள்? "ஐயோ! ஆண்டவருடைய இரத்தத்தைச் சிந்தி விட்டேனே" என்று அழ ஆரம்பிக்கிறார்கள். பெருமை உள்ளவர்கள்

இயேசுவின் இரத்தத்தின் மதிப்புத் தெரியாதவர்களாக இருக்கிறார்கள். அதனால்தான் அவர்களுடைய வாழ்க்கையில் அந்தக் கிருபை வருவதில்லை.

கிருபை வர வேண்டும் என்றால், ஒரு பாவம் செய்த உடனே "இப்படிச் செய்து விட்டேனே" என்று ஆண்டவருடைய சமூகத்தில் போய் நில்லுங்கள். உங்களைத் தாழ்த்துங்கள். அப்பொழுதுதான் கடவுளுடைய இரக்கம் உங்களுக்குக் கிடைக்கும். ஆண்டவர் உங்களை உயர்த்துவார். இன்றைக்குப் பல கிறீஸ்தவர்கள் இதைச் செய்யாததினால்தான் அவர்களுடைய வாழ்க்கையில் பரிசுத்தம் இல்லாமல் இருக்கிறது. அவர்களுடைய வாழ்க்கையில் தேவன் பெரிய காரியங்களைச் செய்ய முடியாமல் போய் விடுகிறது. உண்மையான மன மாற்றத்திற்குரிய மேன்மையை, ஆசீர்வாதத்தை அவர்கள் அனுபவிக்க முடியாமல் போய் விடுகிறது. ஆண்டவருக்கு முன்பாக உங்களைத் தாழ்த் துங்கள். அவர் உங்களை உயர்த்துவார். உங்கள் பாவங்களைக் கழுவித் தூய்மையாக்கி, மறுபடியும் நீங்கள் இழந்து போன அந்த மேன்மையை உங்களுக்குக் கொடுக்கிறார்.

------------

## 10. பாவ மன்னிப்பு மலிவு இல்லை

*இன்றைக்குப் பலர் தவறு செய்து விட்டு, சாதாரணமாக இருக்கிறார்கள். பாவ மன்னிப்பு இலவசம்; ஆனால் மலிவு இல்லை. ஒரு மனிதன் எத்தனைதான் தான தர்மங்கள் செய் தாலும், அதிகமாக ஜெபித்தாலும், ஒரேயொரு பாவம் மன்னிக்கப்படுவதற்குக் கூட, அது போதுமானதாக இருக் காது. இயேசு கிறீஸ்துவின் இரத்தம்தான் மனிதனுடைய பாவங்களை மன்னிக்கக் கூடியது. ஆகையினால் பாவ மன்னிப்பு என்பது மலிவு அல்ல. இயேசுவின் இரத்தம் மிக மிக அதிக மதிப்புடையது. மனிதனால் அதை விலை கொடுத்து வாங்க முடியாது என்பதால், தேவன் அதை இலவசமாகக் கொடுக்கிறார். அதை இலவசமாகக் கொடுக்கிறார் என்பதால், பலர் அதை மலிவாக நினைக்கிறார்கள்.*

*ஒரு பொய் சொன்னால் கூட ஐயாயிரம் ரூபாய் அபராதம் செலுத்த வேண்டும் என்று சொன்னால், நீங்கள் அழுது விடுவீர்கள். ஏனென்றால் 5000 ரூபாய் சம்பாதிப்பதற்கு எவ்வளவு கஷ்டம் என்றும், அதன் மதிப்பு என்னவென்றும் உங்களுக்குத் தெரியும். ஆனால் ஆண்டவருடைய இரத்தம் சிந்தப்படும்போது, அதன் மதிப்பு தெரியவில்லை. அதனால் தான் அசட்டையாக இருக்கிறோம். ஆகவேதான் விவிலியம், "பன்றிகளிடத்தில் உங்கள் முத்துக்களைப் போடாதீர்கள்" (மத்தேயு 7:6). என்று சொல்கிறது. பன்றிகளுக்கு அதன் மதிப்புத் தெரியாது. ஒரு பாவம் செய்வதற்கு முன்பாக, ஆண்டவருடைய இரத்தத்தைச் சிந்தப் போகிறோம் என்று நினைத்துக்கொள்ளுங்கள்.*

**இயேசு கிறீஸ்துவின் இரத்தம் விலையேறப் பெற்றது. இந்த உலகம் முழுவதையும் கொடுத்தால் கூட, அதற்கு ஈடாகாது.** *அவருடைய இரத்தத்தைத்தான் நாம் சிந்தப் போகிறோம் என்பதை நினைத்துக்கொள்ளுங்கள். இயேசுவின் இரத்தத்தைச்*

*சிந்துவதற்கு நீங்கள் தயார் என்றால், பாவம் செய்து கொள் ளுங்கள். அதனால்தான் பாவத்தை ஆண்டவர் அருவருக் கிறார். பலர் பாவம் செய்து விட்டு, தங்களைத் தாழ்த்தாமல் இருக்கிறார்கள். சவுல் பாவம் செய்து விட்டுத் தன்னைத் தாழ்த்தவில்லை. தாவீது மனம் உடைந்து அழுதார். தாவீது ஆண்டவரிடம் எனக்கு ஒரு புது இருதயத்தைத் தாரும் என்றார். எட்டு நாட்கள் உணவு அருந்தாமல் ஆண்டவருடைய சமூகத்தில் கிடந்து அழுதார். பிறகு அவர் திரும்பவும் அந்தப் பாவத்தைச் செய்யவே இல்லை. இன்றைக்குப் பலர் அப்படிப்பட்டவர்களாக இல்லை; சாதாரணமாக எடுக் கிறார்கள். அதனால் தான் உங்கள் வாழ்க்கையில் நீங்கள் செய்த பாவத்தையே மீண்டும் மீண்டும் செய்கிறீர்கள். அதன் கனாகனம் உங்களுக்குத் தெரியவில்லை. அதன் கனாகனம் தெரிந்தவர்களால் பாவம் செய்ய முடியாது. பாவம் செய்வதற்குப் பயப்படுவார்கள்.*

*இதனால்தான் புனித டொம்னிக் சாவியோ தன் 13 வயதிலேயே இவ்வாறு சொல்கிறார்: "***பாவம் செய்வதை விட நான் சாவேன்***. நான் சாவதற்குக் கூட தயாராக இருக்கிறேன்; ஆனால் பாவம் செய்ய மாட்டேன்." புனித மார்கரெட் மரியம்மாள் கொஞ்ச நேரம் வீண் பேச்சுப் பேசுவார்கள். அப்படிப் பேசுவது அவர்கள் மனதை உறுத்தும். "ஐயோ, பாவம் செய்து விட்டேனே; ஆண்டவரே, உம்மை நோகச் செய்யாதிருக்கிற ஒரு இருதயத்தை எனக்குத் தாரும்!" என்று அழுவார்களாம். அந்த இருதயத்தை ஆண்டவர் எனக்குக் கொடுக்கிற வரைக்கும், ஆண்டவருடைய சமூகத்தை விட்டு நான் எழுந்திருக்கவில்லை என்று சொல்லியுள்ளார்கள். சின்னச் சின்ன காரியங்களுக்குக் கூட தேவ சமூகத்தில் போய் இப்படி அழுதார்கள். நீங்கள் இப்படி உங்களை ஆண்டவருடைய சமூகத்தில் தாழ்த்துங்கள். அப்போது அவர் உங்களை உயர்த்துவார்.*

பாவத்தில் நாம் விழுந்து கிடப்பதை தேவன் விரும்ப வில்லை. பாவத்தின் கனாகனம் உங்களுக்குத் தெரிந்திருக்கு மானால், உங்கள் உள்ளம் உடையும். ஆண்டவரின் இரத்தத் தைச் சிந்துவதற்கு நான் யார்? என்ற உண்மையை உணர்ந்து கொள்வது, அவருக்கு எதிராக இவ்வளவு குற்றம் செய்தேனே என்று கண்ணீர் விடுவது, மனம் உடைவது, இதுதான் நம்மைத் தாழ்த்துவது. இதுதான் நம்மைப் பாவத்தில் இருந்து விடுதலை யாக்கி, தேவனுடைய இரக்கத்தையும், கிருபையையும் பெற்றுக் கொடுக்கிறது.

-----------

# 11. என் விருப்பப்படி அல்ல

*ஆண்டவர் ஒரு காரியத்தைச் சொல்லுகிறபோது, அது முக்கியம் அல்ல; நான் அதைச் செய்ய மாட்டேன், இன்னொரு காரியத்தைச் செய்வேன், இதுதான் எனக்கு நல்லது என்று சொல்வதுதான் பெருமை (அகங்காரம்). தேவனை விட நான் ஞானி என்று நினைக்கிறேன். அதுதான் பெருமை. கடவுள் ஒரு காரியத்தை விவிலியத்தில் சொல்லி யிருக்கிறார். அதற்கு நான் கீழ்ப்படியாமல் இதைத்தான் நான் செய்வேன் என்று சொன்னால், அதுதான் பெருமை. தேவனுக்குக் கீழ்ப்படிவதுதான் தாழ்மை. எங்கே கீழ்ப்படிய முடியவில்லையோ, அங்கே பெருமையால் தேவனை எதிர்த்து நிற்கிறோம். தேவன் பல நேரங்களில் பெரிய காரியங்களை நம்மிடம் கேட்பது இல்லை. சின்னச் சின்னக் காரியங் களைத்தான் செய்யும்படி கேட்கிறார்.*

*நாமானின் வாழ்க்கையில் நாம் அதை வாசிக்கிறோம் (2அரசர். 5:9-12). நாமானுக்குத் தொழுநோய் இருந்தது. எலிசாவிடத்தில் வருகிறான். அவன் பெரிய படைத்தளபதி யாக இருந்ததினால் அவன் பெருமையோடு வருகிறான். அவன் வந்த உடனே எலிசா தம் இடத்தில் இருந்து எழுந்து வந்து, தன் மீது கை வைத்து ஜெபிப்பார் என்று நினைத்தான். ஆனால் எலிசா வரவில்லை. வேலைக்காரன் வந்து, யோர்தானில் சென்று ஏழு முறை மூழ்கியெழு, சரியாகி விடும் என்று எலிசா கூறியதாக மட்டும் சொன்னான். நாமானுக்கு அவமானம்.*

*ஒரு அற்புதத்தை அவன் பெற்றுக்கொள்வதற்கு முன்பாக, அவன் தன்னைத் தாழ்த்துகிறானா என்று தேவன் சோதித்தார். அவனுக்குத் தாழ்மை இருக்கிறதா என்று பார்க்கிறார். அவனுக்குத் தாழ்மை இருக்கிறதா என்று எப்படித் தெரியும்? நாமானின் பெருமையால் இதை*

ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அப்போது அவன் அருகில் இருப்பவன், "ஐயா! இதை விடப் பெரிய காரியத்தைச் செய்யச் சொன்னால் செய்வீர்களே. இது சாதாரண விஷயம்தானே? செய்து பாருங்கள்" என்கிறார் (2அரசர். 5:13). அந்தப் பதில் அவன் உள்ளத்தில் இருந்த ஆணவத்தைப் போக்குகிறது. திரும்பிப் போய் அவன் ஏழு முறை மூழ்குகிறான்; பூரண சுகமடைகிறான்.

இயேசு எப்படித் தம்மைத் தாழ்த்துகிறார்? சாவை ஏற்கும் அளவுக்கு, அதுவும், சிலுவைச் சாவையே ஏற்கும் அளவுக்குக் கீழ்ப்படிந்து தம்மையே தாழ்த்திக்கொள்கிறார். பிதா இயேசு வைச் சிலுவையில் மரிக்க வேண்டும் என்று சொல்கிறார். இயேசு அதற்குக் கீழ்ப்படிந்து தம்மையே தாழ்த்துகிறார். (பிலிப்பியர் 2:8). தாழ்ச்சி என்றால் தேவனுக்குக் கீழ்ப்படிவது. யாருக்குக் கீழ்ப்படிய மனமில்லையோ, அவர்கள் பெருமை உள்ளவர்கள். கீழ்ப்படிய மனமில்லாததினால்தான் வானதூத ராக இருந்தவன் பிசாசாக மாறினான். பல மனிதர்களுடைய வாழ்க்கையிலும் கீழ்ப்படிய மனமில்லாததினால் கிருபையை இழந்து போகிறார்கள். இயேசு கீழ்ப்படிந்தார். சாவை ஏற்கும் அளவுக்கு, அதுவும் சிலுவைச் சாவை ஏற்கும் அளவுக்குக் கீழ்ப் படிந்து தம்மையே தாழ்த்தினார். ஆண்டவர் நம்மிடம் அவ்வளவு பெரிய காரியங்களைக் கேட்கவில்லை. சின்னச் சின்ன காரியங்களைக் கேட்கிறார். அதிலே நாம் கீழ்ப்படி யாமல் இருந்திருக்கிறோம். பல நேரங்களில் எதிர்த்திருக் கிறோம். தேவனுக்கு இப்படிக் கீழ்ப்படிய மனமில்லாதவர்கள் பல நேரங்களில் சுகமடைய முடியாமல் போய்விடுகிறது. கடவுள் சுகம் கொடுக்க விரும்பினாலும், அவர்களால் அதைப் பெற்றுக் கொள்ள முடியாமல் போய்விடுகிறது. ஏனென்றால் அவர்கள் தேவனுக்குக் கீழ்ப்படிய மனமில்லாதவர்களாக இருக்கிறார்கள்.

**விவிலியத்தில் சொல்லியிருக்கிற வார்த்தைக்குக் கீழ்ப்படி யுங்கள் - அதுதான் தாழ்மை.** *நிறைய வார்த்தைகளுக்கு நாம் கீழ்ப்படியாமல் இருந்துகொண்டு நான் தாழ்ச்சியோடு இருக்கிறேன் என்றால், அது தாழ்ச்சி இல்லை. அது பெருமை. பெருமை உள்ளவர்கள் வேத வசனத்திற்குக் கீழ்ப்படிவ தில்லை. தங்களுடைய மனதுக்குக் கீழ்ப்படிகிறார்கள். எனக்கு அறிவு இருக்கிறது, புத்தி இருக்கிறது, எனக்குத் தெரியும் என்று தங்கள் மனதிற்குக் கீழ்ப்படிகிறார்கள். அது தான் பெருமை.*

*தேவனுடைய வார்த்தையை விட என்னுடைய அறிவு, புத்தி பெரியது; தேவனுடைய ஞானத்தை விட நான் அதிக ஞானம் உள்ளவன் என்று நினைக்கிறார்கள். அதனால்தான் தேவ வார்த்தைக்குக் கீழ்ப்படிய முடிவதில்லை. அதுதான் பெருமை. கீழ்ப்படியாததினால்தான் அவர்கள் வாழ்க்கையில் கண்ணீர்.*

*கிறீஸ்துவுக்குள் பிரியமான சகோதர, சகோதரிகளே! நம்மைத் தாழ்த்துவது என்றால், தேவனுடைய வார்த்தைக்குக் கீழ்ப்படிவது. தேவனுடைய குரலுக்குக் கீழ்ப்படிவது. ஆண்டவர் நம்மோடு பேசும்போது, உணர்த்தும்போது, உடனே கீழ்ப்படிவது. அதுதான் தாழ்மை. பலர் கீழ்ப்படி யாமல் தங்கள் இதயத்தைக் கல்லாக்கிக் கொள்கிறார்கள். ஆனால் ஜெபிக்கிறார்கள். கடவுள் உங்கள் இதயத்தைப் பார்க்கிறார். தேவனுடைய கிருபையைப் பெற்றுக்கொள் ளும் அளவிற்கு, உங்கள் இதயம் தாழ்மையுடையதாக இருக் கிறதா?*

*இயேசு தம்மைத் தாழ்த்துகிறார். அவருடைய உள்ளத்தில் போராட்டம் வந்தது. கெத்சமெனிக்கு இயேசு போகிறபோது நான் சிலுவையில் மரித்தாலும், எத்தனையோ பேர் என் இரத்தத்தை வீணாக்கி விடுவார்களே! எவ்வளவோ பேர்*

*மனம் திரும்பாமல், பாவத்தில் இருப்பார்களே! ஏன் இதை நான் செய்ய வேண்டும்? என்ன பிரயோஜனம்? அவரது மனதிற்கு, அந்த நேரத்தில் அது நல்லதாகப் படவில்லை. ஆனாலும் இயேசு சொல்கிறார்:* **“என் விருப்பப்படி அல்ல, உம் விருப்பப் படியே நிகழட்டும்”** *(மத்தேயு. 26:39; மாற்கு. 14:36; லூக்கா. 22:42); உம்முடைய சித்தத்திற்கு என்னைக் கையளிக் கிறேன் என்று ஒப்புக்கொடுக்கிறார். இயேசு இப்படித் தான் தம்மைத் தாழ்த்துகிறார். இப்படித் தாழ்த்துகிறவர்களை தேவன் உயர்த்துகிறார்.*

*இயேசுவே தன் அறிவையும், ஞானத்தையும் நம்பவில்லை. தம் விருப்பப்படிப் போகவில்லை. ஆனால் இன்றைக்குப் பலர், நம்முடைய விருப்பத்தையே முன்னால் வைத்துக்கொண்டு இருக்கிறோம். நம்முடைய விருப்பங்களைத் தூக்கி எறிந்து விட்டு, தேவனுடைய விருப்பத்திற்கு நம்மைக் கீழ்ப்படுத்துவது இல்லை. தேவனுடைய குரலுக்குக் கீழ்ப்படிவது இல்லை. அதுதான் பெருமை. தேவன் அருமையாய்க் கொடுத்திருக்கிற இந்த நாட்களிலே, அவரிடத்திலிருந்து தாழ்மையைக் கற்றுக் கொள்ளுங்கள். அதனால்தான் இயேசு சொல்கிறார்:* **“என்னிடத் தில் கற்றுக்கொள்ளுங்கள். நான் மனத் தாழ்மையும், சாந்தமும் கொண்டு இருக்கிறேன்”** *(மத்தேயு. 11:29). இயேசுவினிடத்தில் கற்றுக்கொள்ளுங்கள். தாழ்ச்சிதான் ஒரு மனிதனுக்கு உயர்வைக் கொண்டு வரும்.*

*அருமையான சகோதர, சகோதரிகளே! நம் வாழ்க்கையில் எவ்வளவோ பாவங்களைச் செய்திருக்கிறோம். ஆனால் தாழ்த்துகிறோமா? ஆண்டவர் இயேசுவிடம் அந்தத் தாழ்ச்சி யைக் கற்றுக்கொள்ளுங்கள். தாழ்மை உள்ளவர்களைத் தேவன் உயர்த்துகிறார். தம்முடைய கிருபையினால் தாங்குகிறார். நீங்கள் ஊழியம் செய்வதாலேயோ, ஜெபிக்கிறதாலேயோ, நாம் நல்லவர்கள் என்பதனாலேயோ அவர் தாங்கவில்லை. தாழ்ச்சி உள்ளவர்களை தேவன் தாங்குகிறார்.*

*நீதிமொழிகள் 16:18:* **"அழிவுக்கு முந்தியது அகந்தை; வீழ்ச்சிக்கு முந்தியது வீண் பெருமை."** *ஒரு மனிதன் வீழ்ந்து போவதற்கு முன்பாக, அவனுக்கு வருவது வீண் பெருமை. ஒரு மனிதன் அழிவுக்கு முன்பாக வருவது அகந்தை. "மனிதரில் நான் யார்?" என்று உங்களையே எண்ணிப் பாருங்கள். புனித இஞ்ஞாசியார் இவ்வாறு சொல்கிறார்: "இந்த உலகில் எத்தனையோ அரசர்கள் இருக்கிறார்கள்; அதிகாரிகள் இருக் கிறார்கள்; தொழில் அதிபர்கள் இருக்கின்றார்கள்; ஆனால் நீங்கள் யார்? ஒரு பெரிய காட்டில் தோப்பாக, ஒரு மரமாக, ஒரு கிளையாகக் கூட நீ இல்லை. அதில் ஒரு இலையைப் போலத்தான் நீ இருக்கிறாய். இவ்வளவுதான் மனிதன். ஆனால் பேசுகிற வார்த்தைகளில் எவ்வளவு பெருமை! அதனால்தான் ஆண்டவர், தன்னை உயர்த்துகிறவன் தாழ்த்தப்படுவான்" என்று சொல்லுகிறார்.*

*பிதா ஏன் இயேசுவை உயர்த்தினார்? இயேசு தன்னை முழுமையாகத் தாழ்த்தினார்.* **"எனவே கடவுளும் அவரை மிகவே உயர்த்தி, எப்பெயருக்கும் மேலான பெயரை அவருக்கு அருளினார். ஆகவே, இயேசுவின் பெயருக்கு விண்ணவர், மண்ணவர், கீழுலகோர் அனைவரும் மண்டியிடுவர்"** *(பிலிப்பியர் 2:9-10) என்று விவிலியம் கூறுகிறது. விண்ணகத்திலும், இந்தப் பூமியிலும் நீங்கள் ஆசீர்வதிக்கப்பட்டு, தேவனுடைய கிருபையினால் உயர்வு பெற வேண்டுமானால் உங்களைத் தாழ்த்துங்கள். தாழ்ச்சியைக் கற்றுக்கொள்ளுங்கள். பாவம் செய்வதற்குப் பயப்படுங்கள். தேவனுடைய வார்த்தைக்குக் கீழ்ப்படியுங்கள். ஆண்டவர் உங்களை உயர்த்துவார்.*

-----------

## 12. இறையாட்சி வருக!

இயேசுவுக்குத் திருமுழுக்குக் கொடுத்த யோவான், **“அவரது செல்வாக்குப் பெருக வேண்டும்; எனது செல்வாக்கு குறைய வேண்டும்”** (யோவான் 3:30) என்றார். ஆண்டவருடைய செல்வாக்கு வளர வேண்டும். என்னுடைய செல்வாக்கு குறைய வேண்டும் என்றார். இன்றைய குடும்பங்களிலே யாருடைய செல்வாக்கு அதிகமாக இருக்கிறது? குடும்பத்தில் உள்ள ஒவ்வொருவரும் தங்கள் விருப்பப்படி நடக்க வேண்டும் என்று நினைக்கிறார்கள். நம்முடைய அரசாட்சியை வீட்டில் கொண்டு வரப் பார்க்கிறோம். ஆனால் வீடுகளில் கிறீஸ்துவின் அரசாட்சி வர வேண்டும்; நம்முடைய செல்வாக்குக் குறைய வேண்டும். நம்முடைய விருப்பங்கள் அங்கு நடப்பதை விரும்பக்கூடாது. அதற்குப் பதிலாக இயேசு கிறீஸ்துவின் செல்வாக்கு அங்கு வளர வேண்டும்.

### யார் ஆளுகை செய்ய வேண்டும்?

இன்றைக்கும் குடும்பங்களில் சண்டையிடும்போது சொல்லும் முதல் வார்த்தை, “இது எனக்குப் பிடிக்காது என்று தெரியாதா?” என்பது. பெற்றோர்கள் பிள்ளைகளை வளர்க்கும்போது கூட, “ஏன் இப்படிச் செய்கிறாய்? இது எனக்குப் பிடிக்காது” என்கிறார்கள். “இது எனக்குப் பிடிக்காது” அல்லது “இது எனக்குப் பிடிக்கும்” என்று சொன்னால், அங்கு நம்முடைய செல்வாக்கை வைக்கிறோம். “இது ஆண்டவருக்குப் பிடிக்காது” அல்லது “இது ஆண்டவருக்குப் பிடிக்கும்” என்று சொன்னால் அங்கு ஆண்டவருடைய செல்வாக்கை வைக்கிறோம். ஆண்டவருடைய செல்வாக்கு தான் பெருக வேண்டும்.

எசாயாவில் ஆண்டவர், **“உங்களுடைய விருப்பங்கள் என்னுடைய விருப்பங்கள் அல்ல; உங்கள் வழிமுறைகள் என்**

**வழிமுறைகள் அல்ல; உங்கள் எண்ணங்கள் என் எண்ணங்கள் அல்ல''** (எசாயா. 55:6) என்கிறார். இப்படி இருக்கும்போது நீங்கள் எனக்குப் பிடிக்காது என்று சொல்லும்போது, என்னுடைய பிள்ளைகளையும் எனது ஆட்சிக்கு உட்படுத்த நினைக்கிறேன். அதற்குப் பதிலாக, இது கடவுளுக்குப் பிடிக்காது என்று சொன்னால் கடவுளின் ஆட்சியினுள் கொண்டு வருகிறோம். இதைத்தான் யோவான் சொல்கிறார்: **''என்னுடைய செல்வாக்குக் குறைய வேண்டும்''** (யோவான். 3:30). பலர் அவரைத் தேடி அவரிடம் திருமுழுக்குப் பெற வந்தனர். அவர் ஒரு பெரிய தீர்க்கதரிசி என்று, அவரின் பிரசங்கத்தைக் கேட்பதற்காக, மனம் மாறுவதற்காக அவரிடம் வந்தார்கள். அப்போதுதான் அவர் **''என்னுடைய செல்வாக்கு குறைய வேணடும். இயேசுகிறீஸ்துவின் செல்வாக்கு வளர வேண்டும்''** என்று சொன்னார்.

இன்றைக்கு உலகத்தில் உள்ள எல்லா மனிதர்களும், அதிகாரிகளும், தலைவர்களும், அவர்களுடைய செல்வாக்கை நிலைநாட்டுவதற்காகத்தான் போராடிக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் இயேசு கிறீஸ்து அதற்காக வரவில்லை. அவர் தாழ்மையைக் கற்றுக்கொடுப்பதற்காக வந்தார். உங்கள் வீட்டில் நீங்கள் பெரிய ஆளாக இருந்தால், இயேசு சின்ன ஆளாகி விடுவார். அவருக்கு அங்கே இடமே இருக்காது. வீட்டில் நீங்கள் ஒன்றுமில்லாமல் இருந்தால், இயேசு எல்லாவற்றிலும் ஆளுகை செய்வார்.

நாம் என்ன ஜெபிக்கிறோம்? **''விண்ணுலகில் இருக்கிற எங்கள் தந்தையே! உமது பெயர் தூயது எனப் போற்றப்படுக! உமது அரசு வருக''** (மத்தேயு 6) என்று சொல்கிறோம். கடவுளுடைய அரசு வீட்டிற்கு வர வேண்டும். ஆண்டவர்தான் நம்முடைய வீடுகளில் ஆட்சி செய்ய வேண்டும். நிறைய வீடுகளில் வாசலில் **''இயேசுவே இவ்வீட்டின் தலைவர்!''** என்று

எழுதியிருப்பார்கள். இயேசு தலைவராக இருந்தால், அந்த வீட்டில் எப்படிச் சண்டை வரும்? ஏன் சண்டை போடு கிறார்கள்? "குடும்பத்தில் யார் தலைவர்?" என்ற போட்டி. வீட்டில் ஒவ்வொருவரும் தாங்கள் ஆட்சி செய்ய வேண்டும் என்று நினைக்கிறார்கள். தாழ்ந்து போக முடிவதில்லை. அதனால்தான் சண்டை. இயேசு வீட்டின் தலைவராக இருந் தால், சண்டை வராது. கிறீஸ்துவின் அரசாட்சியைக் கொண் டிருப்பதுதான் தாழ்மை. இயேசுவை உயர்த்த வேண்டுமானால் நம்மைத் தாழ்த்த வேண்டும். வீட்டில் யார் ஆட்சி நடைபெற வேண்டும்? இயேசுவின் ஆட்சி நடைபெற வேண்டும்.

----------

## 13. அனைவரையும் அன்பு செய்வோம்

*திருமுழுக்கு யோவான் ஒரு நீதிமான். தாயின் கருவிலே தூய ஆவியால் நிரப்பப்பட்டவர். ஆயினும் தம்முடைய செல்வாக்கு நிலைக்க வேண்டும் என்று விரும்பவில்லை. இயேசுதான் வளர வேண்டும் என்று நினைக்கிறார். அப்படி தன்னைத் தாழ்த்துகிறவர்கள் உயர்த்தப்படுவார்கள். அதனால் தான், மனிதராகப் பிறந்தவர்களில் யோவானை விடப் பெரியவர் யாரும் இல்லை என்று இயேசு சொல்கிறார். ஏன் அவரை விடப் பெரியவர் யாரும் இல்லை? ஏனென்றால் அந்த அளவுக்கு அவர் தம்மைத் தாழ்த்துகிறார்.*

*யோவானைப் பார்த்துக் கேள்வி கேட்கிறார்கள்:*

*“நீர் மெசையாவா?” அவர் “இல்லை” என்கிறார்.*

*“நீர் ஒரு தீர்க்கதரிசியா?” என்கிறார்கள். அதற்கும், “இல்லை” என்கிறார்.*

*“அப்படி என்றால் நீர் யார்?” என்று கேட்கிறார்கள்.*

*அதற்கு யோவான், “பாலை நிலத்தில் கூப்பிடுகிற ஒரு சத்தம்” என்கிறார்.*

*எசாயா எழுதுகிறார்:* “**பாலை நிலத்தில் கூக்குரல் ஒன்று கேட்கிறது**” *(எசாயா. 40:3). சத்தம் ஒன்று கேட்கிறது. சத்தம் என்றால் ஒரு செய்தியைச் சொல்லும். சொல்லிவிட்டு மறைந்து விடும். அதனால்தான் யோவான் சொல்கிறார்: ஒரு செய்தி யைச் சொல்ல வந்திருக்கிறேன். சொல்லி விட்டு மறைந்து விடுவேன். பின் எனக்குப் பின்னால் ஒருவர் வருகிறார். அவரின் மிதியடி வாரை அவிழ்க்கக் கூட எனக்குத் தகுதி இல்லை என்று சொல்கிறார். எப்படித் தம்மைத் தாழ்த்துகிறார்!*

*யோவான் நம்மைப் போல் பாவம் செய்து விட்டு மனம் மாறிய ஒரு சாதாரணமான மனிதரில்லை. தாயின் கருவில்*

*இருக்கும்போதே தூய ஆவியால் நிரப்பப்பட்டவர். இயேசுவுக்கே திருமுழுக்குக் கொடுத்தவர். அவர் தம்மைத் தாழ்த்துகிறார். எத்தனை பேர் தங்களைத் தாழ்த்த முடியும்? எத்தனை பெண்கள் தங்கள் கணவரை விட நான் நல்லவள் என்று சொல்ல முடியும்? எத்தனை கணவன்மார்கள் தங்கள் மனைவியை விட நான் நல்லவன் என்று சொல்ல முடியும்? தேவ சமூகத்தில் மற்றவர்களை விட நாம் நல்லவர்கள் என்று சொல்ல முடியவில்லை. உங்களை விட அவர்கள்தான் நல்லவர்கள் என்றால், பின் ஏன் அவர்களிடம் சண்டை போடுகிறீர்கள்? நமக்குத் தாழ்ச்சி இல்லாததினால்தான் நிறைய பிரச்சினை.*

**"கட்சி மனப்பான்மைக்கும், வீண் பெருமைக்கும் இடம் தர வேண்டாம்"** *(பிலிப்பியர் 2:3). கட்சி மனப்பான்மை என்பது வீட்டில் இருவர் மட்டும் சேர்ந்துகொள்வது. இதற்கு இடம் கொடுக்காதீர்கள். சில வீடுகளில் அப்பாவும் மகளும் ஒரு கட்சியில் இருப்பார்கள். அம்மாவும் மகனும் ஒரு கட்சியில் இருப்பார்கள். இது கட்சி மனப்பான்மை. குடும்பத்தில் அனைவரும் ஒன்றுதான். ஆண்டவருடைய பிள்ளை களுக்கு ஆண்டவர் ஒரு குடும்பத்தைக் கொடுத்திருக்கிறார். குடும்பத்தில் பிடித்தவர்களை மட்டும் அன்பு செய்தால், நீங்கள் பரலோகம் செல்ல முடியாது.* **வீட்டில் இருக்கும் அனைவரையும் சமமான அன்பு செய்ய வேண்டும்.** *குடும்பத்தில் ஒருவர் நல்லவராக இருக்கலாம். இன்னொருவர் வம்பு செய்பவராக இருக்கலாம். ஆனால் அனைவரையும் அன்பு செய்ய வேண்டும்.*

*ஏனென்றால் நீங்கள் பரலோகத்திற்குச் செல்லும்போது அங்கு எல்லாரும் ஒரே மாதிரி இருக்க மாட்டார்கள். வேறு மதத்தில் பிறந்து, மனம் மாறியவர்களும் வருவார்கள். வேறு நாட்டில் இருந்தும் வருவார்கள். எல்லாரும் அங்கே பரலோகத்தில் இருப்பார்கள். இங்கு இவர்களை உன்னால் அன்பு செய்ய*

*முடியவில்லை என்றால், அங்கு போய் எப்படி அன்பு செய் வாய்? அதனால்தான், குடும்பத்தில் உள்ளவர்களை சமமாக அன்பு செய்யவில்லை என்றால், பரலோகம் செல்ல முடியாது. பரலோகம் செல்வதற்கு பூமியில் உங்கள் குடும்பம் ஒரு சோதனை. குடும்பத்தில் உள்ளவர்களை சமமாக நேசிக்க முடிகிறதா? உங்களில் எத்தனை பேர் கடவுளுக்கு முன்பாக நான் சமமாக நேசிக்கிறேன் என்று சொல்ல முடியும்? அனை வரையும் சமமாக நேசித்தால்தான் உங்களைப் பரலோகத் திற்குத் தகுதி ஆக்குவார்.*

**மனத் தாழ்மையும், பிறரன்பும்**

**நாம் சகோதர அன்பு கொண்டுள்ளதால் சாவிலிருந்து வாழ்வுக்குக் கடந்து வந்துள்ளோமென அறிந்துள்ளோம்** *(1 யோவான் 3:14). சாவிலிருந்து வாழ்வுக்கு வந்தாயிற்று. நரகத்திலிருந்து பரலோகத்திற்கு வந்தாயிற்று என்று எப்போது தெரியும்? சகோதர அன்பு இருந்தால்தான் நாம் தேர்ச்சி பெற்று விட்டோம் என்று அர்த்தம். அந்த அன்பு இல்லை என்றால், மரித்தால் பரலோகம் செல்ல முடியாது. உங்க ளுக்குப் பரலோகம் எப்போது உத்திரவாதம்? இயேசு கிறிஸ்துவின் மீது வைக்கிற விசுவாசம். அவர் பேதுருவையும், யூதாஸையும் பாரபட்சத்துடன் பார்க்கவில்லை. பேதுருவை நேசிப்பது போலவே யூதாஸையும் இயேசு நேசிக்கிறார். யோவானை நேசிப்பது போலவே நம்மையும் நேசிக்கிறார். நல்லவனா கெட்டவனா என்று பார்ப்பதில்லை. எல்லாரையும் ஒரே மாதிரி அன்பு செய்கிறார். அதுதான் சகோதர அன்பு. இந்த அன்பு நமக்குள் இருந்தால், சாவிலிருந்து நாம் வாழ்வுக்குக் கடந்து வந்து விட்டோம், நாம் தேர்ச்சி பெற்று விட்டாம் என்று அர்த்தம்.*

**''அன்பு கொண்டிராதோர் சாவிலேயே நிலைத்திருக் கின்றனர்''** *(1 யோவான் 3:14). பார்ப்பதற்கு நன்றாக*

ஜெபிக்கலாம். சிலர் நற்செய்தியை அறிவிக்கலாம். வேறு எதுவும் செய்யலாம். ஆனால் இந்த அன்பு இல்லை என்றால் சாவில் இருக்கிறோம். குடும்பத்தில் பாகுபாடு இல்லாமல் சமமாக நேசித்துப் பழக வேண்டும். அதுதான் அன்பு. அந்த அன்பு இருந்தால் சாவில் இருந்து வாழ்வுக்கு வந்து விட்டோம். இல்லை என்றால், சாவிலே நிலை கொண்டு இருக்கிறோம்.

----------------

## 14. மற்றவர்களை உயர்ந்தவராகக் கருதுங்கள்

*தாழ்ச்சி உள்ளவர்களைக் கடவுள் உயர்த்துகிறார். தாழ்ச்சி அன்பு செய்ய நம்மைக் கொண்டு போகும்.* **"மனத் தாழ்மையோடு மற்றவர்களை உங்களிலும் உயர்ந்தவராகக் கருதுங்கள்"** *(பிலிப்பியர் 2:3). பரிசேயனுக்கும், ஆயக் காரனுக்கும் உள்ள ஒரு பெரிய வேறுபாடு அதுதான். இயேசு அதிகமாகக் கண்டித்தது யாரை என்றால் பரிசேயரைத்தான். ஏனென்றால், பரிசேயன் ஆலயத்திற்கு வந்து, இந்த ஆயக் காரனைப்போல் நான் இல்லாமல் இருப்பதற்காக நன்றி என்று சொன்னான். பரிசேயன் நினைத்தது என்ன? ஆயக் காரனை விடத் தான் நல்லவன் என்று. நாம் கூட அடிக்கடி இவர்களை விட நான் நல்லவன் என்று நினைக்கிறோம். அப்படி நினைத்தால் நீங்கள் பரிசேயனைப் போல் இருக்கிறீர்கள். இதுதான் நாம் மோசம் போகக் கூடிய ஒரு காரியம். பரிசேயன் மனம் திரும்பாமல், கடவுளுடைய கிருபையைப் பெற்றுக்கொள்ள முடியாமல் போனதற்குக் காரணம், அவனுடைய பெருமை. பெருமை என்ன செய்கிறது? இவனை விட எவ்வளவோ பரவாயில்லை என்று நினைக்கிறது. ஆனால் விவிலியம் என்ன சொல்கிறது? மனத் தாழ்மையினால் மற்றவர்களை உங்களை விட உயர்வாகக் கருதுங்கள்.*

*அப்படிக் கருத முடியுமா? குடித்து விட்டுச் சண்டை போடுகிறவர்கள், தங்கள் நடத்தையில் ஒழுக்கம் தவறுகிற வர்கள், இவர்களையெல்லாம் உங்களை விட உயர்வாகக் கருத முடியுமா? மனத் தாழ்மையோடு உங்களை விட மற்றவர்களை உயர்வாகக் கருதுங்கள். அதுதான் தாழ்மை. பரிசேயன் தன்னை ஆயக்காரனை விட உயர்வாகக் கருதி னான். பரிசேயனின் ஜெபத்தை ஆண்டவர் மோசம் என்று சொன்னார். அவன் நீதிமானாகத் திரும்பவில்லை.*

ஆலயத்திற்கு வந்தும்கூட அவனுக்கு ஒரு பிரயோஜனமும் இல்லை. ஏன் கிறீஸ்தவர்களால் இதை ஏற்றுக்கொள்ள முடியவில்லை என்று சொன்னால், தேவனுடைய நீதித் தீர்ப்பு எப்படி இருக்கும் என்று பலருக்குத் தெரியாது.

## கடவுள் தீர்ப்பிடும் முறை

மனிதர்கள் கண்டதையும், கேட்டதையும் வைத்துத் தீர்ப்பிடுகிறார்கள். ஆனால் இயேசு கண்டதையும், கேட்டதையும் வைத்துத் தீர்ப்பிட மாட்டார். இயேசு நீதியின்படி தீர்ப்புச் செய்வார் (எசாயா. 11:3-4). ஆண்டவரின் தீர்ப்பில் முதலான வர் கடைசியாவர், கடைசியானவர் முதலாவர் (மத்தேயு 20:16). கோவிலில் முன்னாடி நிற்பவர்கள் பின்னால் வந்து விடுவார்கள். அதிக பக்திமானாகக் காணப்படுபவர்கள் பரலோகத்திற்கு வந்திருக்கவே மாட்டார்கள். கோவிலுக்கு ஒழுங்காக வராதவர்கள் பரலோகத்திற்குள் இருப்பார்கள். வீட்டில் உள்ளவர்களை கோவிலுக்கு வரவில்லை என்று சண்டை போட்டவர்கள் கீழே இருப்பார்கள். திட்டு வாங்கியவர்கள் பரலோகத்தில் இருப்பார்கள். ஏனென்றால் விவிலியம் சொல்கிறது. **முதலானவர் கடைசியாவர்; கடைசியானவர் முதலாவர்.**

பரலோகத்திற்குச் சென்றவுடன் உங்களுக்கு அதிர்ச்சியாகத்தான் இருக்கும். என்ன அதிர்ச்சி? யார் முன்னாடி இருப்பார்கள் என்று நினைத்தோமோ, அவர்கள் அங்கு வந்திருக்கவே மாட்டார்கள். நாம் யாரை இவர்கள் தேற மாட்டார்கள் என்று நினைக்கிறோமோ அவர்கள் அங்கு இருப்பார்கள். இயேசு ஒரு தீர்ப்பு முறை வைத்திருக்கிறார். அந்தத் தீர்ப்பின்படி இந்த உலகின் முன்னால் இருப்பவர்கள் பின்னால் சென்று விடுவார்களா. இந்த உலகத்தில் கடைசியில் இருப்பவர்கள் முன்னால் வந்து விடுவார்கள்.

*நிறைய கிறிஸ்தவர்களுக்கு தேவனுடைய நீதியையும், நியாயத்தையும் குறித்தும் தெரியாது. அப்படி தெரியாததி னால்தான் பரிசேயனைப் போல மற்றவர்களை விட நான் நல்லவன் என்கிறார்கள். கடவுளுடைய தீர்ப்பை மனிதன் அவ்வளவு எளிதாகப் புரிந்துகொள்ள முடிவதில்லை.* **''அவர் வந்து பாவம், நீதி, தீர்ப்பு ஆகியவை பற்றி உலகினர் கொண்டுள்ள கருத்துகள் தவறானவை என எடுத்துக்காட்டு வார்''** *(யோவான். 16:8). மனிதர்கள் நீதியைக் குறித்தும், தீர்ப்பைக் குறித்தும், பாவத்தைக் குறித்தும் வைத்திருக்கும் எண்ணங்கள் தவறானவை என பரிசுத்த ஆவியானவர் எடுத்துக் காட்டுவார்.*

*ஆண்டவர் ஒரு முறை ஒரு ஊழியரைப் பரலோகத்திற்கு அழைத்துச் சென்றார். அப்போது அந்த ஊழியர் அவரது உறவினர் ஒருவரைப் பரலோகத்தில் பார்த்தார். அவன் ஒரு குடிகாரன். கோவிலுக்குச் செல்ல மாட்டான். இந்த ஊழியருக்கு அவனைப் பரலோகத்தில் பார்த்த உடனே அதிர்ச்சி!*

*அவனைப் பார்த்து, ''நீ எப்படிப் பரலோகத்திற்கு வந்தாய்?'' என்று கேட்டார். அப்போது அவன் ஒரு வசனத்தை அவருக்கு எடுத்துக் காண்பித்தான். பின், ''இந்த வசனத்தின்படி நான் பரலோகம் வந்தேன்'' என்று சொன்னான். அது என்ன வசனம்?* **''எனவே, கிறீஸ்து தம் ஊனுடலில் துன்புற்றார். அப்பொழுது அவர் கொண்டிருந்த மனநிலையை நீங்களும் படைக்கலமாகப் பூண்டுகொள்ளுங்கள். ஊனுடலில் துன்புறுவோர் பாவத்தை விட்டு விடுகின்றனர். அவர்கள் தங்கள் ஊனுடல் வாழ்வின் எஞ்சிய காலமெல்லாம் மனிதருடைய தீய நாட்டங்களுக்கு இசையாமல் கடவுளின் திருவுளப்படி வாழ்கின்றார்கள்''** *(1பேதுரு. 4:1-2). உடலில் துன்புறுகிறவர் பாவத்தை விட்டு விடுகின்றனர். அந்தத் துன்பத்தினால் என்ன*

நடக்கிறது? மீதி இருக்கும் நாட்களில் மனிதருடைய இச்சைகளுக்கு இடம் கொடுக்காமல், விருப்பங்களுக்கு இடம் கொடுக்காமல் கடவுளின் விருப்பப்படி செய்கிறார்கள். அந்த மனிதன் ஊழியரிடம், ''குடித்ததால் என் உடம்பில் வியாதி வந்து படுக்கையில் கிடந்தேன். பின் மனந்திரும்பிப் பரலோகத்திற்கு வந்தேன்'' என்று சொன்னான்.

## தீர்ப்பிடாதீர்கள்

முதலாவது, நாம் யாரையும் தீர்ப்பிட முடியாது. ஒரு பாவத்தை ஒருவர் செய்வதை வைத்துத் தீர்ப்பிட முடியாது. இதைத்தான் பரிசேயன் செய்கிறான். அவன் அந்த ஆயக்காரனைத் தீர்ப்பிடுகிறான். கடவுள் இந்த உலகத்தில் எல்லாவற்றையும் மனிதனுக்குக் கொடுக்கிறார். மனிதனுடன் பேசுவதற்கு ஒருவருக்குத் தீர்க்கதரிசன வரத்தைக் கொடுத்துப் பேசுகிறார். ஒருவரைச் சுகமாக்குவதற்கு ஒருவருக்கு நோய்களை சுகமாக்கும் வரத்தைக் கொடுத்துச் சுகமாக்குகிறார். பாவ மன்னிப்பைக் கூட குருக்களை வைத்துக் கொடுக்கிறார். ஆனால், கடவுள் தீர்ப்பிடும் அதிகாரத்தை மட்டும் கடவுளாகிய தம்மிடம் மட்டுமே வைத்துள்ளார். ஆனால் பலர் தீர்ப்பிடும் அதிகாரத்தைத் தங்கள் கைகளில் எடுக்கிறார்கள். அதுதான் பிரச்சினை. பிறர் குற்றவாளிகள் எனத் தீர்ப்பு அளிக்காதீர்கள். அப்போது தான் நீங்களும் தீர்ப்புக்கு உள்ளாக மாட்டீர்கள். நீங்கள் தீர்ப்புக்கு உள்ளாகாமல் இருக்க வேண்டுமானால், மற்றவரைத் தீர்ப்பிடக் கூடாது. மற்றவர்களைத் தீர்ப்பிட்டால் நீங்கள் தீர்ப்புக்குள்ளாவீர்கள். நீங்கள் அளிக்கும் தீர்ப்பையே நீங்களும் பெறுவீர்கள். நீங்கள் எந்த அளவையால் அளக்கிறீர்களோ, அதே அளவையாலே உங்களுக்கும் அளக்கப்படும். உங்கள் கண்ணில் இருக்கும் மரக்கட்டையைப் பார்க்காமல் உங்கள் சகோதரர் அல்லது சகோதரியின் கண்ணில் இருக்கும் துரும்பை நீங்கள் கூர்ந்து

*கவனிப்பதேன்? (மத்தேயு. 7:1-3).* தேவன் ஒருவரே தீர்ப்பிடு வதற்குத் தகுதியானவர். பள்ளிக்கூடத்திற்குச் சென்று அங்குள்ள பத்தாம் வகுப்பு, பன்னிரண்டாம் வகுப்பின் முழு ஆண்டு பரீட்சை பேப்பரை நான் திருத்துகிறேன் என்று கேட்டால், அங்குள்ள ஆசிரியர்கள் அந்தப் பேப்பரை உங்களுக்குத் தருவார்களா? தர மாட்டார்கள். ஏனென்றால், அதற்குரிய தகுதி உங்களிடம் இல்லை. அதற்குத் தகுதி இருக்க வேண்டும்.

நன்றாக ஊழியம் செய்துகொண்டிருந்த ஒரு சகோதர ருடைய அறைக்குப் பக்கத்து அறையில் வயதான அருட் தந்தை ஒருவர் இருந்தார். அவர் சுருட்டுக் குடித்துக் கொண்டே இருப்பார். சுருட்டுப் புகை இவர் அறை வரை வருமாம். அப்பொழுது இந்தச் சகோதரர் என்ன சொல்வார்? எப்பப் பார்த்தாலும் இப்படி ஊதி ஊதித் தள்ளுகிறார் என்று சொல்லுவார். கொஞ்ச நாள் கழித்துக் கேள்விப் பட்டேன். இந்தச் சகோதரரும் புகை பிடிக்க ஆரம்பித்து விட்டார். நான் சொல்வது ஆண்டவரால் பயன்படுத்தப் பட்ட ஓர் ஊழியக்காரர் வாழ்வில் நடந்ததைத்தான் சொல்கிறேன்.

என்னுடைய வாழ்க்கையில் யாருடைய வயிறாவது தொப்பை விழுந்திருந்தால் கிண்டல் செய்வேன். இது என்ன தொப்பை என்று கிண்டல் செய்வேன். கொஞ்ச நாள் கழித்து எனக்குத் தொப்பை வந்து விட்டது. உண்மையைச் சொல் கிறேன். இதைச் சொல்வதற்கு வெட்கப்படவில்லை. என் வயிறு பெரிதாகி விட்டது. நானும் உணவை எல்லாம் குறைக் கிறேன். ஒரு ஊழியக்காரன் இப்படி இருந்தால் நன்றாக இருக் குமா? எவ்வளவுக்கெவ்வளவு குறைப்பதற்கு முயற்சி எடுத்தேனோ அவ்வளவுக்கு அவ்வளவு அது கூடிக்கொண்டு தான் போனது. உடற்பயிற்சி எல்லாம் செய்தேன். ஒன்றும்

*மாறவில்லை. ஒரு நாள் ஜெபம் செய்யும்போது, ஆண்டவ ரிடத்தில் மன்னிப்புக் கேட்டு இனி யாரையும் நான் கிண்டல் செய்ய மாட்டேன் என்றேன். பிறகு தன்னாலே குறைந்து விட்டது.*

*இந்த உலகத்தில் யாருக்கும் மற்றவர்களைத் தீர்ப்பிடு வதற்குத் தகுதி இல்லை.* **"எல்லா மனிதரும் பாவம் செய்து கடவுளுடைய மேன்மையை இழந்தார்கள்"** *(உரோமை. 3:23) என்று உரோமையரில் கூறப்பட்டுள்ளது. அதனால் இயேசு வுக்கு மட்டும்தான் தீர்ப்பிடத் தகுதி உண்டு.*

**பரலோகப் பார்முலா**

*இயேசு ஒரு பார்முலா* (formula) *வைத்திருக்கிறார். அதன்படி முதன்மையாய் உள்ளவர்கள் கடைசி இடத்திற்குப் போய் விடுவார்கள். கடைசியில் இருந்தவர்கள் முதன்மையாய் வந்து விடுவார்கள். ஆண்டவர் வைத்திருக்கும் பார்முலா பலருக்குத் தெரியாததால் "இவர்கள் மோசம், அவர்கள் மோசம், யாரும் சரி கிடையாது" என்கிறார்கள். இயேசுவின் பார்முலா என்ன? நீங்கள் ஒரு இடத்தில் ஒரு லட்சம் முதல் போட்டு வியாபாரம் செய்கிறீர்கள். அதில் உங்களுக்கு மாதம் ஐந்தாயிரம் இலாபம் வருகிறது. இன்னொரு இடத்தில் ஐந்து இலட்சம் முதல் போட்டு வியாபாரம் செய்கிறீர்கள். அதில் உங்களுக்கு மாதம் பத்தாயிரம் ரூபாய் இலாபம் வருகிறது. இதில் எது நல்ல இலாபம் தருகிற வியாபாரம்? ஒரு லட்சம் போட்டு வியாபாரம் பண்ணியதுதான், இல்லையா? நாம் எவ்வளவு இலாபம் என்று மட்டும் பார்ப்பதில்லை. எவ்வளவு முதலீடு செய்தோம், அதற்கு எவ்வளவு இலாபம் வருகிறது என்றும் பார்க்கிறோம். இதைப் போலத் தான் ஆண்டவரும் பார்க்கிறார். அவர் ஒரு மனிதனுக்கு எவ்வளவு கொடுத்திருக்கிறார், அவனிடமிருந்து எவ்வளவு வருகிறது என்றே பார்க்கிறார்.*

*இயேசு காணிக்கைப் பெட்டியின் அருகில் அமர்ந்திருக் கிறார். அங்கு காணிக்கை போடுபவர்களைப் பார்க்கிறார். அதிகமாகப் போட்டவர்கள் அதற்காகப் பெருமைப்பட்டுக் கொள் கிறார்கள். ஆனால் இயேசு இரண்டே இரண்டு செப்புக் காசு போட்ட பெண்தான் அதிகம் போட்டாள் என்கிறார் (லூக்கா 21:3). உங்களுக்குப் பத்தாயிரம் கொடுத்தால் ஆயிரம் ரூபாய் போடுகிறீர்கள். ஆனால் அந்தப் பெண்ணுக்கு இரண்டு செப்புக் காசுதான் கொடுத்தேன். அனைத்தையுமே அவள் காணிக்கையாகப் போட்டு விட்டாள் என்றார். தாம் எவ்வளவு கொடுத்திருக்கிறார், அவர்கள் எவ்வளவு தருகிறார்கள் என்றுதான் கணக்குப் பார்க்கிறார். இதுதான் இயேசுவின் பார்முலா.*

**"தன் தலைவரின் விருப்பத்தை அறிந்திருந்தும், ஆயத்த மின்றியும், அவர் விருப்பப்படி செயல்படாமலும் இருக்கும் பணியாள் நன்றாய் அடிபடுவான்"** *(லூக்கா 12:47). இயேசுவைப் பற்றித் தெரிந்தும் நீ கீழ்ப்படியாமல் நடந்தால், செமையாக அடி விழும்.* **"ஆனால், அவர் விருப்பத்தை அறியாமல் அடி வாங்க வேண்டிய முறையில் செயல்படுபவன் அவரது விருப்பத்தை அறியாமல் செயல்படுவதால் சிறிதே அடிபடுவான்"** *(லூக்கா. 12:48). ஒரே தவறைத்தான் இரண்டு பேரும் செய்கிறார்கள். ஒருத்தனுக்கு செமையாக அடி, இன்னொரு வனுக்குக் கொஞ்சம் அடி. ஏன்? முந்தியவன் தெரிந்தே செய்ததால் செமையாக அடி, இவனுக்கு எவ்வளவு கொடுத்து இருக்கிறேன், அதைத்தான் பார்க்கிறார். இப்போது மற்றவர்களை விட நாம் பரவாயில்லை என்று சொல்ல முடியுமா? சொல்ல முடியாது. ஏனென்றால், உனக்கு எவ்வளவு தரப்பட்டுள்ளது. உன்னிடமிருந்து எவ்வளவு வருகிறது என்று பார்க்கிறார். இப்படிப் பார்த்த பின்தான், முதலானோர் கடைசியாவர், கடைசியானோர் முதலாவர் என்கிறார்.*

“**மிகுதியாகக் கொடுக்கப்பட்டவரிடம் மிகுதியாகவே எதிர் பார்க்கப்படும். மிகுதியாக ஒப்படைக்கப்படுபவரிடம் இன்னும் மிகுதியாகக் கேட்கப்படும்**” *(லூக்கா. 12:48). ஆண்டவர் உனக்கு எவ்வளவு கொடுத்திருக்கிறாரோ, அவ்வளவு எதிர்பார்க்கிறார். உங்களுக்குக் கொடுக்கப்பட்ட குடும்பம், வளர்ப்பு, கல்வி, பராமரிப்பு, வாய்ப்புகள், சூழ்நிலைகள், கடவுளுடைய அருள், உங்களுக்குக் கடவுள் காட்டிய இரக்கம், உங்களுக்குக் கடவுள் கொடுத்த ஆலோசனைகள், உங்களுக்  காகப் பண்ணப்பட்ட ஜெபங்கள், உங்களுக்குக் கொடுக்கப் பட்ட இறை வார்த்தைகள், இறை அனுபவங்கள், இதெல்லாம் இன்னொரு ஆன்மாவுக்குக் கொடுக்கப்பட்டு இருந்தால், உங்களை விட அவர்கள் நன்றாக இருந்திருப்பார்களா அல்லது மோசமாக இருந்திருப்பார்களா? உங்களை விட நன்றாகத்தான் இருந்திருப்பார்கள். இதனால்தான்* “**மனத் தாழ்மையினாலே மற்றவர்களை உங்களை விட உயர்வாகக் கருதுங்கள்**” *(பிலிப்பியர் 2:3) என்கிறார். ஏனென்றால், உங்களுக்குக் கொடுக்கப்பட்ட அளவுக்கு அவர்களுக்குக் கொடுக்கப்படவில்லை.*

*இன்றைக்குப் பலர் என்ன நினைக்கிறார்கள்? மற்றவர் களை விட நான் பரவாயில்லை என்றுதானே! உங்களுக்குக் கொடுக்கப்பட்ட அளவுக்கு அவர்களுக்குக் கொடுக்கப்பட வில்லை. தேவனிடத்திலிருந்து நிறையப் பெற்றிருக்கிறோம். அதற்கு ஏற்ற பலனை நாம் இன்னும் கொடுக்கவில்லை. மற்றவர்களுக்கு ஒரு லட்சம் டெபாசிட் செய்தால், நமக்கு ஆண்டவர் ஐந்து லட்சம் டெபாசிட் செய்திருக்கிறார். ஒரு லட்சம் வாங்கியவர்கள் ஐந்தாயிரம் கொடுத்தால், நாம் எவ்வளவு கொடுக்க வேண்டும்? இருபத்தைந்தாயிரம் கொடுக்க வேண்டும். ஆனால் நாம் பத்தாயிரம் கொடுத்து விட்டு, ஐந்தாயிரம் கொடுத்தவனைப் பார்த்து, அவனைவிட நான் பரவாயில்லை என்கிறோம். இதனால்தான் நாம்*

பின்னால் கிடக்கிறோம். யாருக்கு அதிகமாகக் கொடுக்கப் பட்டதோ, அவர்களிடம் அதிகமாக எதிர்பார்க்கப்படும் (லூக்கா 12:48).

**தாழ்மை என்பது போலியாக நடிப்பது அல்ல;** மாறாக, அது உண்மையை ஏற்பது. தேவனுடைய நீதியையும், நேர்மையையும் பார்த்து நம்மையே நிதானித்து அறிந்து கொள்வதுதான் தாழ்மை. அந்தத் தீர்ப்பைப் பார்க்கும்போது யாரும் பெருமை பாராட்ட முடியாது. ஏனென்றால் நாம் பெற்றுக்கொண்டது அதிகம். ஆண்டவர் உங்களுக்கு எவ்வளவு கொடுத்திருக்கிறார், எவ்வளவு கிருபை பாராட்டி யிருக்கிறார் என்று யோசித்துப் பாருங்கள். ஆண்டவர் உங்கள் வாழ்க்கையில் இடைபட்டு இவ்வளவு நன்மைகளைச் செய்ய வில்லை என்றால், நீங்கள் எங்கே இருந்திருப்பீர்கள் என்று நினைத்துப் பாருங்கள்.

எத்தனை முறை நம்முடைய வேதனைகளில் ஆண்டவர் நம்மைத் தூக்கி விட்டிருப்பார் என்று நினைத்துப் பாருங்கள், நமக்கு எவ்வளவு ஆறுதல் தந்திருக்கிறார் என்று நினையுங்கள். நாம் கீழே விழுந்தபோது இறைவார்த்தையைக் கொடுத்து நம்மை எத்தனை முறை கை தூக்கி விட்டிருக்கிறார்! நாம் மனந்திரும்புவதற்கு எவ்வளவு பொறுமையைக் காட்டியிருக் கிறார்! நமக்கு எவ்வளவு அற்புதங்கள் செய்திருக்கிறார்! எத்தனை தடவை தம் ஊழியர்கள் மூலம் பேசியிருக்கிறார் என்று நினைத்துப் பாருங்கள். இவ்வளவு தந்த ஆண்டவருக்கு நாம் என்ன செய்தோம்? அப்படியானால் நாம் முன்னாடி செல்வோமா, பின்னாடி செல்வோமா? யோசித்துப் பாருங்கள். மனத் தாழ்மையினாலே உங்களை விட மற்றவரை உயர்வாகக் கருதுங்கள்.

மோசே இரண்டு முறை நாற்பது நாட்கள் உபவாசம் இருந்து ஜெபித்தவர். இந்த உலகத்தில் ஆண்டவர் யாருடனும்

*மோசேயிடம் பேசியது போலப் பேசவில்லை. அவருடன் ஒரு நண்பனைப் போல முகமுகமாய்ப் பேசினேன் என்று சொன்னார். ஒரு தீர்க்கதரிசியிடம் நான் பேசினால் கனவு வழியாகவோ, காட்சி வழியாகவோ பேசுவேன். ஆனால் என் ஊழியன் மோசே எல்லா இடங்களிலும் உண்மை உள்ளவன் என்று ஆண்டவரே கூறுகிறார். அதனால் நான் ஒரு நண்பனிடம் பேசுவது போல முகமுகமாகப் பேசினேன் என்கிறார் (எண்ணிக்கை 12:6-8). அப்பேற்பட்ட மோசே என்ன சொல்கிறார்?*

*இணைச்சட்டம் 29:2-4ல் மோசே இஸ்ரயேலர் அனைவரையும் வரவழைத்துக் கூறியது:* **"எகிப்து நாட்டில் பாரவோனுக்கும், அவன் அலுவலர் அனைவருக்கும், அவன் நாடு முழுமைக்கும் உங்கள் கண் முன்பாக ஆண்டவர் செய்தவற்றை நீங்கள் கண்டீர்கள். கொடிய சோதனைகளையும், அடையாளங்களையும், அருஞ்செயல்களையும், வியத்தகு செயல்களையும் அங்கே உங்கள் கண்களால் கண்டீர்கள். ஆயினும், புரிந்து கொள்ளும் உள்ளத்தையும், காண்கிற கண்களையும், கேட்கின்ற செவிகளையும் இந்நாள் வரை ஆண்டவர் உங்களுக்குத் தரவில்லை."** *மோசே தீர்ப்பிடவில்லை. மோசே இடத்தில் நாம் இருந்தால் இந்த இஸ்ரயேல் ஜனங்கள் படுமோசம் என்று சொல்லியிருப்போம். தேவனுடன் முகமுகமாகப் பேசக்கூடிய அந்த ஊழியர் அந்த ஜனங்களைக் குற்றம் சொல்லவில்லை. அதனால்தான் ஆண்டவர் சொல்கிறார்: தன்னைத்தானே தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுகிறான்; தன்னைத்தானே உயர்த்துகிறவன் தாழ்த்தப்படுகிறான்.*

*யாராக இருந்தாலும், உங்களை விட மற்றவர்களை உயர்வாக நினையுங்கள். ஒரு ஜெபக் குழுவில் நீங்கள் இருந்தால், உங்களை விட மற்றவர்களை உயர்வாக நினையுங்கள். உங்களிடம் இல்லாத நல்ல குணங்கள் மற்றவர்களிடம்*

இருக்கிறது. பின்னர் எப்படி அவர்களை உங்களுடன் ஒப்பிடுகிறீர்கள்? ஆண்டவர் நம்மிடம் மிகவும் பொறுமை யாய் இருக்கிறார். எனவே நாமும் மற்றவர்களிடம் பொறுமையாய் இருக்க வேண்டும். ஆண்டவர் நம்மை எவ்வளவோ மன்னித்திருக்கிறார். அப்படி என்றால் நாம் மற்றவர்களை மன்னிக்க வேண்டும். அதனால்தான் மனத் தாழ்மையினாலே உங்களை விட மற்றவர்களை உயர்வாகக் கருதுங்கள்.

இப்போது உங்களை நீங்கள் ஆராய்ந்து பாருங்கள். நான் தாழ்மையோடு நடக்கிறேனா, அல்லது என் உள்ளத்தில் இன்னும் ஆணவம் ஒட்டிக்கொண்டு இருக்கிறதா என்று யோசித்துப் பாருங்கள். இந்தப் பெருமையினால்தான் நிறையக் கிறீஸ்தவர்கள் கூட நரகத்தில் போய் விழுகிறார்கள். இந்தப் பெருமையினால்தான் பலர் தேவனுடைய அருளை இழந்து போகிறார்கள்.

--------------

## 15. அற்புதங்கள் ஏன் நடக்கிறது?

இந்த உலகத்தில் எதையும் பெற்றுக்கொள்ள நாம் தகுதி அற்றவர்கள்தான். சிலருக்கு சில அற்புதங்கள் நடந்த உடனே, "நான் ஜெபம் செய்தேன்; அதனால் கிடைத்தது" என்று பெருமைப்படுகிறார்கள். அது வீண் பெருமை. நீ ஜெபம் செய்ததால் கிடைக்கவில்லை. ஆண்டவரின் இரக்கத் தால், இயேசுவின் அன்பால் கொடுத்திருக்கிறார். கடவுள் ஓர் அற்புதத்தைச் செய்கிறார் என்றால் அவர்கள் அதிகம் ஜெபம் செய்தார்கள் என்பதால் அல்ல, ஜெபிக்காத எத்தனையோ பேருக்குக் கூட ஆண்டவர் அற்புதம் செய்கிறார். ஆண்டவர் நல்லவர்களுக்கும் அற்புதம் செய்கிறார்; கெட்டவர்களுக்கும் செய்கிறார்; சண்டை போடுகிறவர்களுக்கும் செய்கிறார்; அமைதியாக இருப்பவர்களுக்கும் செய்கிறார். அது கடவுளுடைய அன்பு, இரக்கம். ஓர் அற்புதம் நடந்த உடனே பெருமைப்படாதே. "அதைச் செய்தேன், இதைச் செய்தேன்" என்று சொல்லாதே. கடவுள் யாருக்கும் தகுதியைப் பார்த்து அற்புதம் செய்வது இல்லை. **கடவுளிடமிருந்து அற்புதத்தைப் பெற்றுக்கொள்ள யாருக்கும் தகுதி இல்லை.** ஆண்டவரை யாரும் கட்டாயப்படுத்தவும் முடியாது. அற்புதம் செய்வது அவருடைய இரக்கம், அன்பு. உங்கள் பிள்ளை உங்களிடம் ஒரு சைக்கிளை அடம்பிடித்துக் கேட்கிறது. பாசத்தினால் நீங்களும் வாங்கிக் கொடுத்து விட்டீர்கள். அந்தப் பிள்ளை வெளியே போய் அவன் நண்பர்களிடம், "நான் அழுது அடம்பிடித்து இந்த சைக்கிளை வாங்கினேன்" என்று சொன்னால் நீங்கள் என்ன செய்வீர்கள்? இரண்டு அடி போட்டு சைக்கிளை வாங்கி உள்ளே வைப்பீர்கள். அந்தப் பிள்ளை அடம் பிடித்ததால் நீங்கள் வாங்கித் தரவில்லை. உங்களுடைய அன்பினால் வாங்கிக் கொடுத்தீர்கள். அதே போலத்தான் ஆண்டவரிடம் நீ அழுது கூப்பாடு போட்டு

உபவாசம் இருந்து ஜெபித்ததால் அற்புதம் நடக்கவில்லை. அவர் அன்பு வைத்ததால் அற்புதம் நடந்தது.

ஒரு அம்மா ஊழியரிடம் சென்று, "நான் ஒழுங்காக ஜெபிக்கிறேன். ஜெபத்திற்கு வருகிறேன். ஆனால் அற்புதம் நடக்கவில்லை" என்றாராம். அதற்கு அவர், "நான் ஜெபிக் கிறேன். ஜெபத்திற்கு வருகிறேன் என்று சொன்னால் அற்புதம் நடக்காது. இயேசு சிலுவையில் உங்களுக்காக பலியானார். அதனால்தான் அற்புதம் நடக்கும்" என்று சொன்னார். அற்புதத்தைப் பெற்றவர்கள் நல்லவர்கள், பெறாதவர்கள் நல்லவர்கள் இல்லை என்று சொல்ல முடியாது. ஆண்டவர் அப்படிப் பார்ப்பது இல்லை. உங்கள் மீது பரிவு கொண்டு அவ்வாறு செய்கிறார். உங்களுக்கு இருக்கும் இரண்டு பிள்ளைகளில் ஒரு குழந்தைக்கு வியாதி; இருவரில் யாரை அதிகம் கவனித்துக் கொள்வீர்கள்? வியாதியாய் இருக்கும் பிள்ளைக்கு நீங்கள் தேவை. அதனால்தான் அதற்கு ஓடிப் போய் உதவி செய்கிறீர்கள். அது நல்ல பிள்ளை என்பதற்காக அல்ல. அது பலவீனமாக இருக்கிறது என்பதற்காக உதவி செய்கிறீர்கள். இதே போலத்தான் ஆண்டவர் உதவி செய்கிறார். உங்களுக்கு அற்புதம் செய்வதால் நீங்கள் நல்லவர் என்று உங்களை நினைத்து விடாதீர்கள். நாம் பலவீனமாக இருக்கிறோம் என்பதால்தான் ஆண்டவர் செய்கிறார். ஆண்டவர் என்னோடு இருக்கிறார் என்று எனக்குத் தெரியும். ஏனென்றால் அவர் இல்லாமல் என்னால் இருக்க முடியாது என்றுதான் என் முன் வந்து நிற்கிறார்.

### பெற்றுக்கொண்டவர்கள் பெருமைப்படலாமா?

அமெரிக்க ஐக்கிய நாட்டில் D.L. மூடி என்ற பெய ருள்ள ஓர் ஊழியர் இருந்தார். ஒரு நாள் ஒரு பெரிய தொழில் அதிபர், ஒரு பணக்காரர், அந்த ஊழியரைத் தம் வீட்டிற்கு அழைத்தார். அவர் அங்கு சென்றபோது, அவருடைய

பங்களா, ஒரு பெரிய தோட்டத்தின் நடுவில் இருந்தது. அந்தப் பணக்காரர் ஊழியரைத் தம் வீட்டின் மாடிக்கு அழைத்துச் சென்று, அங்குள்ளவற்றைக் காண்பித்து, இங்கு இருக்கிற அனைத்தும் நானே மிகவும் கஷ்டப்பட்டு சம்பாதித்தது என்று சொன்னார். மீண்டும் வேறு பல சொத்துகளையும் காண்பித்து, "இவையனைத்தையும் நான்தான் சம்பாதித்தேன்" என்றார். பின் பணக்காரர், "நான் இவ்வளவு சொல்லிக் கொண்டிருக்கிறேன். நீங்கள் ஒன்றும் சொல்லவில்லையே" என்று ஊழியரைப் பார்த்துக் கேட்டார். அதற்கு அவர், "இந்த உலகத்தில் இவ்வளவு சொத்துக்களைச் சேர்த்து வைத்திருக் கிறீர். சந்தோஷம். ஆனால் மேலே எவ்வளவு சேர்த்து வைத்திருக்கிறீர்?" என்று கேட்டார்.

### நமக்குக் கொடுத்தவர் யார்?

ஆண்டவர் இயேசு லூக்கா நற்செய்தியில் ஓர் உவமையில் கூட இதைத்தான் சொல்கிறார். ஒரு பெரிய பணக்காரன் இருந்தான். அவனுக்கு ஏராளமான நிலபுலன்கள் இருந்தன. ஒரு முறை அவனுடைய நிலங்கள் எல்லாம் அதிக விளைச் சலைக் கொடுத்தன. அவன் அன்று இரவில் தனக்குள்ளே இவ்வாறு சொல்லிக் கொண்டான்: "என் களஞ்சியங்களை இடித்து இன்னும் பெரிதாகக் கட்டுவேன். எல்லாம் எனக்கு இருக்கிறது" என்று சொன்னான். அதற்கு ஆண்டவர், "முட்டாளே, இன்று இரவே நீ சாகப் போகிறாய். நீ சேர்த்து வைத்ததை யார் எடுத்துக்கொள்ளப் போகிறார்களோ?" (லூக்கா. 12:20) என்று சொன்னார்.

இன்றைக்குப் பல காரியங்களைக் குறித்து நாம் பெருமைப் படுகிறோம். ஆண்டவர் நமக்குக் கொடுத்திருக்கிற வசதி களைக் குறித்துப் பெருமைப்படுகிறோம். பணத்தைக் குறித்து பெருமைப்படுகிறோம். ஆனால் இயேசு என்ன சொல்கிறார்? தன்னைத் தானே தாழ்த்துகிறவன்

*உயர்த்தப்படுகிறான். தன்னையே உயர்த்துகிறவன் தாழ்த்தப் படுவான்.*

*தேவன் உங்களுக்குக் கொடுத்திருக்கிறதெல்லாம் உங்களைத் தாழ்த்துவதற்காக. "இதையெல்லாம் ஆண்டவர் எனக்குக் கொடுத்திருக்கிறார்" என்று ஆண்டவரை மகிமைப் படுத்தவும், அவருக்கு நன்றி சொல்வதற்காகவும் தேவன் இதைக் கொடுத்திருக்கிறார்.* **இந்த உலகத்திற்கு நாம் வரும்போது ஒன்றையும் கொண்டு வரவில்லை. இந்த உலகத்தை விட்டுப் போகும்போது ஒன்றையும் கொண்டு போகப் போவதும் இல்லை** *(1 திமோத்தேயு. 6:7). இதெல்லாம் யார் கொடுத்தது?*

*யோவான்,* **"விண்ணிலிருந்து அருளப்படாவிட்டால் எவரும் எதையும் பெற்றுக்கொள்ள முடியாது"** *(யோவான் 3:27) என்றார். நாம் பெற்றுக்கொண்டது எல்லாம் கடவுளிடமிருந்து வந்தது. அதனால்தான் யாரும் எதிலாவது குறைபட்டுப் போனால், கடவுளிடத்தில் கேட்க வேண்டும். யாக்கோபு 1:5ன்படி,* **உங்களிடையே குறைவான ஞானம் கொண்டிருப்போர் கடவுளிடத்தில் கேட்கட்டும்.** *ஏனென்றால் கடவுள் கொடுக்காமல் யாரும் எதையும் பெற்றுக்கொள்ள முடியாது. உங்கள் வாழ்க்கையில் சில காரியங்கள் குறைவுபட்டு இருந்தால், ஆண்டவரிடம் போய்க் கேளுங்கள்.*

*இன்றைக்குப் பலர் தங்களுக்குக் குறைவு ஏற்படும் போது, மற்றவர்களைப் பார்த்துப் பொறாமைப்படுகிறார்கள். அது தான் பெருமையின் இயல்பு. பெருமை பிடித்தவர்களுக்கு ஒரு குறைவு வந்தால் அடுத்தவர்கள் நன்றாக இருக்கின்றார்களே என்று பொறாமைப்படுவார்கள். தாழ்மை உள்ளவர்களுக்கு ஒரு குறைவு வந்தால், யாரிடமும் பொறாமைப்பட மாட்டார்கள். தங்களைத் தாழ்த்தி தேவனிடத்தில் உதவி கேட்பார்கள். நாம் ஞானத்தில்*

*குறைவுபட்டு இருக்கலாம். பணம், திறமை, உடல் சுகம் அல்லது வேறு எதில் வேண்டுமானாலும் நாம் குறைவுபட்டு இருக்கலாம். எந்தக் காரியங்களில் குறைவுபட்டு இருந்தாலும், ஆண்டவரிடத்தில் உதவி கேட்க வேண்டும். அப்பொழுது அவரும் ஞானத்தைக் கொடுப்பார்.* **அவர் முகம் கோணாமல் தாராளமாய் எல்லாருக்கும் கொடுப்பவர்** *(யாக்கோபு. 1:5).*

*கடவுள் முகம் கோணாமல் தாராளமாக எல்லாருக்கும் கொடுக்கக் கூடியவர். நம்மைப் பார்த்து, "நீ போன தடவை தானே வாங்கினாய்? மறுபடியும் உனக்கு எதற்கு?" என்று சொல்ல மாட்டார். நாம் எவ்வளவு கேட்டாலும், அதற்கு மேலாக, அதிகமாகக் கொடுக்கக் கூடியவர். முகம் கோணாமல் தாராளமாக எல்லாருக்கும் கொடுக்கக் கூடியவர். உங்களுடைய வாழ்க்கையில் எங்கே குறைவுபட்டு இருந்தாலும், உடனே ஆண்டவரிடத்தில் கேளுங்கள். பலர் ஆண்டவரிடத்தில் கேட்பது இல்லை. மற்ற எல்லாரிடமும் கேட்கிறார்கள். எல்லாரும் கைவிட்ட பிறகு கடைசியில் ஆண்டவரிடம் கேட்கிறார்கள். அப்படி இருக்கக் கூடாது. முதலில் ஆண்டவரிடத்தில் உங்களைத் தாழ்த்துங்கள்.*

------------

## 16. குறுக்கு வழியைத் தேடாதீர்கள்

*கிறீஸ்தவர்களுக்கு ஒரு குறைவு, ஒரு தேவை என்றால், முதலில் ஆண்டவரிடம் செல்ல வேண்டும். ஊழியர்களிடம் போய் நிற்கக் கூடாது. ஊழியர்கள் தர முடியாது. ஆண்டவர் தான் தர முடியும். ஆண்டவர்தான் முகம் கோணாமல் தருபவர். எல்லாரும் ஆண்டவரிடத்தில் ஜெபிக்க வேண்டும் என்று ஆண்டவரே விரும்புகிறார்.*

*ஊழியர்கள் மூலமாகவும் சில அற்புதங்களைச் செய்கிறார். ஆனால் பல நேரங்களில் நீங்கள் ஜெபிக்க வேண்டும் என்றே ஆண்டவர் விரும்புகிறார். நீங்கள் ஜெபிப்பதற்குப் பதிலாக ஊழியர்கள் ஜெபிக்க முடியாது. எல்லா ஆசீர்வாதங்களும் உங்கள் கைகளிலும் இல்லை. எல்லா ஆசீர்வாதங்களும் ஊழியர்கள் கைகளிலும் இல்லை. சில ஆசீர்வாதங்களை ஊழியர்கள் மூலமாகத்தான் ஆண்டவர் கொடுக்கிறார். ஆனால், பல ஆசீர்வாதங்களை நீங்களே ஜெபித்துப் பெற்றுக்கொள்ள வேண்டும் என்று ஆண்டவர் வைத்திருக்கிறார். ஆனால் நிறைய கிறீஸ்தவர்கள் குறுக்கு வழியைக் கண்டுபிடிக்கிறார்கள்.*

*தாழ்ச்சி உள்ளவர்கள் தங்களைத் தாழ்த்தி தேவனிடத்தில் ஜெபிக்கிறார்கள். ஆணவம் உள்ளவர்கள் தேவ சமூகத்தில் தங்களைத் தாழ்த்துவதற்குப் பதிலாக ஏதாவது ஊழியர்கள் தங்களுக்குப் பதிலாக ஜெபிக்க வேண்டும் என்று நினைக் கிறார்கள். அது தவறு. ஆண்டவர் யாரையும் அவருக்கு ஏஜெண்ட் ஆக இந்த பூமியில் வைக்கவில்லை. அதற்குப் பதிலாக நீங்களே ஜெபிக்க வேண்டும் என்று ஆண்டவர் விரும்புகிறார். சிலர் ஊழியர்களிடம் சொன்னால் போதும். அவர்கள் நமக்காக ஜெபம் செய்வார்கள் என்று நினைக் கிறார்கள். அது தவறு. அப்போது உங்கள் வாழ்க்கையில் பிரச்சினைகள் வந்து கொண்டேதான் இருக்கும். நீங்கள்*

ஜெபிக்கிறவர்களாக மாற வேண்டும். அப்போதுதான் பிரச்சினைகளுக்குத் தீர்வு உண்டாகும். அப்போதுதான் சூழ்நிலைகள் மாறும். அதனால்தான் யாராவது ஞானத்தில் குறைவாக இருந்தால், கடவுளிடத்தில் கேட்கட்டும். ஆண்டவரும் முகம் கோணாமல் தாராளமாகக் கொடுக்கிறவர். அதே சமயம் கேட்கிறவர்கள் விசுவாசத்தோடு கேட்க வேண்டும்.

## தகுதியைக் கொண்டு விசுவசிக்காதீர்கள்

பலர் ஒரு தவறான எண்ணத்தை மனதில் வைத்திருக்கிறார்கள். ஊழியர்கள் ஜெபம் செய்தால்தான் ஆண்டவர் தருவார். நான் ஜெபம் செய்தால் தர மாட்டார் என்று. இதெல்லாம் தவறு. அது முழுக்க முழுக்க, நூற்றுக்கு நூறு பொய். எவ்வளவு பெரிய பாவியாக இருந்தாலும் அவன் ஆண்டவரை நோக்கி உண்மையாகக் கூப்பிடுவானானால், அவனுக்கு அருகில் ஆண்டவர் இருப்பார். ஆண்டவர் இந்த பூமியில் மனிதரிடத்தில் பாரபட்சம் பார்ப்பது இல்லை. எவன் ஒருவன் விசுவாசத்துடன் கேட்கிறானோ அவனுக்கு ஆண்டவர் கொடுக்கிறார்.

எல்லோரும் பாவம் செய்திருக்கிறோம். பெரிய புனிதர்களும் கூட, நான் பாவி என்று கூறியுள்ளார்கள். ஆகவே, எல்லாருடைய ஜெபத்தையும் ஒரே மாதிரிதான் ஆண்டவர் கேட்கிறார். நாம் ஜெபம் செய்தால் ஆண்டவர் கேட்க மாட்டார் என்று யாரும் நினைக்காதீர்கள். கேட்கிறவர்கள் விசுவாசத்தோடு கேட்க வேண்டும். அதுதான் முக்கியம். **தகுதியைப் பார்த்து ஆண்டவர் யாருக்கும் கொடுப்பது இல்லை. ஏனென்றால் ஆண்டவரிடம் இருந்து எதையாவது பெற்றுக்கொள்வதற்கு யாருக்கும் தகுதி இல்லை.** ஆண்டவர் அவருடைய இரக்கத்தையும், அன்பையும் முன்னிட்டு யார் விசுவாசத்தோடு கேட்கிறார்களோ, அவர்களுக்குக் கொடுக்கிறார். ஆகையால்

அற்புதங்கள் கிடைத்த உடன் அவர்கள் நல்லவர்கள் என்று அர்த்தம் இல்லை. அற்புதங்கள் நடக்கவில்லை, அதனால் பொல்லாதவர்கள் என்றும் அர்த்தம் இல்லை. அற்புதம் நடப்பவர்களிடம்தான் ஆண்டவர் பிரியமாய் இருக்கிறார் என்று அர்த்தம் இல்லை. அற்புதத்தை வைத்துக் கடவுளுக்கும், நமக்கும் இடையே உள்ள உறவை எடை போட முடியாது. நீங்கள் விசுவாசத்தோடு கேளுங்கள். அப்போது கடவுள் நன்மைகளைச் செய்கிறார். அற்புதங்களைச் செய்கிறார். விசுவாசத்தைக் கடவுள் பார்க்கிறார். நீ நல்லவனாக இருந் தாலும், கெட்டவனாக இருந்தாலும் ஆண்டவர் உன்னை நேசிக்கிறார். ஆண்டவரின் அன்பை சந்தேகப்படாமல் கேட் கும்போது ஆண்டவர் கொடுக்கிறார், முகம் கோணாமல் கொடுக்கிறார்.

உங்கள் விசுவாசம்தான் அற்புதங்களைக் கொண்டு வரும். உங்கள் விசுவாசம்தான் இந்த உலகத்தை ஜெயிக்கும். உங்கள் தகுதியைக் கொண்டு விசுவசிக்காதீர்கள். பலர் அவர்களுடைய தகுதியைப் பார்த்துக் கடவுளை நம்புகிறார்கள். அது தவறு. நமக்கு என்ன தகுதி இருக்கிறது? ஒன்றுமில்லை. எந்தத் தகுதியை நம்ப வேண்டும்? கடவுள் நம்மேல் வைத்திருக்கிற அன்பை நம்ப வேண்டும். தேவ சமூகத்திற்குப் போகும்போது உங்கள் தகுதியைப் பார்த்து நிற்காதீர்கள். ஆண்டவருடைய அன்பையும் இரக்கத்தையும், அவர் நல்லவர் என்பதையும் நம்புங்கள்.

ஊதாரி மகனுக்கு எந்தத் தகுதியும் இல்லை. தன்னுடைய சொத்தை எல்லாம் ஊதாரித்தனமாக அழித்து விட்டான். தகப்பன் கொடுத்தது ஒன்றுகூட அவனிடம் இல்லை. தகப்ப னின் சொத்து மீதும், தகப்பன் மீதும் எந்த உரிமையும் அவனுக்கு இல்லை. ஆனால் பன்றிகளை மேய்க்கும்போது தான் அவனுக்குப் புத்தி வருகிறது. “தகப்பன் வீட்டில்

வேலைக்காரர்கள் கூட நன்றாக இருக்கிறார்களே. நான் எழுந்து தகப்பனிடம் செல்வேன். அவரிடம், “உமக்கு விரோத மாக எல்லாம் செய்தேன். உம்முடைய வேலைக்காரனாக இருக்கக் கூட எனக்குத் தகுதியில்லை” என்று சொல்வேன். அவர் என்னைத் தள்ள மாட்டார். அன்பு செய்வார்” என்று போனான். தனக்குத் தகுதி இருக்கிறது, தான் அவருடைய பிள்ளை, உரிமை இருக்கிறது என்று அவன் போகவில்லை. அவனுடைய தகுதி, உரிமை எல்லாம் போய்விட்டது.

அதே போலத்தான் நாமும் பாவம் செய்து, கடவுளுடைய பிள்ளைகள் என்ற தகுதியையும், உரிமையையும் இழந்து போனோம். அவருடைய சாயலை இழந்து போனோம். ஆண்டவருடைய மாட்சியை இழந்து போனோம். ஆனால் இயேசு நம்மைத் தேடி வந்தார். நம்முடைய தகுதியைப் பார்த்து ஆண்டவர் உதவி செய்வது இல்லை. யாருக்கும் தகுதி இல்லை. ஆண்டவர் ஒன்றை மட்டும் நம்மிடம் கேட்கிறார். அது என்ன? ஆண்டவர் நல்லவர். அவர் நமக்காகச் சிலுவையில் அறையப்பட்டார். அதை நம்புங்கள் என்று சொல்கிறார். அதை நம்பி அவரிடம் செல்லுங்கள். எனக்குத் தகுதி இல்லை. ஆனால் நீர் எனக்காகச் சிலுவையில் அறையப்பட்டீர். அதை நம்புகிறேன் என்று சொல்லுங்கள். உங்கள் வாழ்க்கை மாறும். உங்கள் வியாதி மாறும். உங்கள் வாழ்க்கையில் அற்புதங்கள் நடக்கும். ஏனென்றால் ஆண்டவர் முகம் கோணாமல் கொடுக்கிற தெய்வம். நல்லவனா, கெட்டவனா என்று பார்த்துக் கொடுப்பவர் அல்லர். ஆண்டவரிடம் போய் நிற்பதற்கு எனக்கு என்ன தகுதி இருக்கிறது என்று ஒரு நாளும் யோசிக்காதீர்கள். ஒரு மனிதனுக்கும் தகுதி இல்லை. நம்முடைய தகுதி இயேசு கிறீஸ்துதான். இயேசு சிலுவையில் அறையப்பட்டதுதான் நம்முடைய தகுதி. அந்தத் தகுதியை நம்பித்தான் ஆண்டவரிடம் போய் நிற்கிறோம்.

*நமக்காகப் பரிந்து பேசுகிற ஒருவர் உண்டு. நமக்காக உயிரைக் கொடுத்த தெய்வம் இயேசு கிறீஸ்து. நமக்காகப் பிதாவின் வலது பக்கத்தில் இருந்து பரிந்து பேசுகிறார் (எபிரே. 12:25). நீ எப்போது உனக்காக அவர் சிலுவையில் அறையப் பட்டதை நம்பிச் செல்கிறாயோ, அப்போது இயேசு கிறீஸ்துவின் விலையேறப்பெற்ற இரத்தம் உனக்காகப் பரிந்து பேசுகிறது. அந்த தைரியத்தில் அவரிடம் போய் நில்; கேள். உன்னுடைய வாழ்வில் எந்தக் குறை இருந்தாலும், முதலில் ஆண்டவரிடம் செல். மீதிக் காரியங்களை எல்லாம் அவர் பார்த்துக் கொள்வார்.*

------------

## 17. வாழ்க்கையில் புயல் வீசக் காரணம்

**"நானே திராட்சைச் செடி; நீங்கள் அதன் கொடிகள். ஒருவர் என்னுடனும், நான் அவருடனும் இணைந்திருந்தால் அவர் மிகுந்த கனி தருவார். என்னை விட்டுப் பிரிந்து உங்களால் எதுவும் செய்ய இயலாது"** *(யோவான் 15:5). தாழ்ச்சி உள்ளவர்கள் இதை அறிந்துகொள்வார்கள், ஏற்றுக்கொள்வார்கள். ஆண்டவரைப் பிரிந்து நம்மால் ஒன்றும் செய்ய முடியாது. ஒரு நன்மையான காரியத்தைச் சிந்திக்கக் கூட முடியாது. பலர் இருதயத்தைச் சில தீய சிந்தனைகள் ஆட்கொள்கின்றன. அதிலிருந்து வெளியே வர முடியாமல் கிடக்கிறார்கள். ஆகையால் ஒரு நல்ல எண்ணத்தைக் கொடுப்பதற்குக் கூட ஆண்டவர் இல்லாமல் முடியாது. அதனால்தான் சொல்கிறார்: "என்னைப் பிரிந்து உங்களால் ஒன்றும் செய்ய முடியாது." இதை உணர்ந்துகொள்வதும், ஏற்றுக்கொள்வதும் தான் தாழ்மை. இயேசு இல்லாமல் என்னால் ஒன்றும் செய்ய முடியாது என்று உணர்ந்துகொள்பவர்கள், ஒவ்வொரு நிமிடமும் ஆண்டவருடைய உதவியை எதிர்பார்த்துக்கொண்டிருப்பார்கள். தாழ்ச்சி உள்ளவர்கள் எப்போதும் கடவுளுடைய உதவியை எதிர்பார்த்துக் கொண்டே இருப்பார்கள்.*

*ஆண்டவரே! நான் பாவமில்லாமல் பரிசுத்தமாய் இருக்க வேண்டுமானால், உமது உதவி தேவை. எனக்கு என்ன பேச வேண்டும் என்று தெரியாது. எனக்கு உமது உதவி தேவை என்று ஆண்டவருடைய உதவியைக் கேட்போம். தாழ்ச்சி உள்ளவர்கள்தான் எப்போதுமே ஜெபம் செய்துகொண்டிருப் பார்கள். ஆணவம் உள்ளவர்கள், நான் செய்து விடுவேன், என்னால் முடியும் என்பார்கள். தன்னைத்தானே உயர்த்து கிறவர்களை ஆண்டவர் தாழ்த்துகிறார்.*

*இயேசு ஒரு நாள் பேதுருவைப் பார்த்து "அக்கரைக்குச் செல்வோம், வாருங்கள்" (மாற்கு. 4:35) என்கிறார். படகில்*

அனைவரும் ஏறி அமர்கிறார்கள். பேதுரு படகு ஓட்டுவதில் அதிக வருடம் அனுபவமுள்ளவர். படகோட்டி. அப்போது பேதுரு ஆண்டவரைப் பார்த்து, "ஆண்டவரே, அமைதியாக உட்கார்ந்திருந்து, படகு செல்வதைப் பாரும்" என்கிறார். ஆண்டவர் உடனே படுத்து உறங்கி விடுகிறார். விவிலியத்தில் தன்னைத்தானே உயர்த்துகிறவன் தாழ்த்தப்படுவான் என்று போடப்பட்டிருக்கிறது. பேதுரு தன் அனுபவத்தினால் தன்னை உயர்த்துகிறார். கொஞ்ச தூரம் படகு சென்றவுடன், புயல் வந்து விட்டது.

**பலர் வாழ்க்கையில் புயல் வீசுவதற்குக் காரணம் அவர்களுக்குள் இருக்கும் பெருமைதான்.** அவர்கள் எப்போது தாழ்ந்து போகிறார்களோ, தாழ்ச்சியைக் கற்றுக்கொள்கிறார்களோ அப்போது வீடுகளில் இருக்கிற புயல் அடங்கிப் போகும்.

ஒரு முறை திருச்சியில் ஒரு மூன்று நாள் கன்வென்ஷன் கூட்டத்திற்காக என்னோடு சகோதரர் ஒருவரை அழைத்துக் கொண்டு சென்றிருந்தேன். முதல் நாள் காலையில் எங்களை ஒரு இடத்திற்கு காரில் காலை உணவுக்காக அழைத்துச் சென்றார்கள். நாங்கள் காலை உணவு சாப்பிட்டுக் கொண்டிருக்கும்பொழுது, அங்கு இரண்டு இளைஞர்கள் வந்தார்கள். அவர்களில் ஒருவர் சமையற்கலைப் பேராசிரியர் (Catering Professor). மற்றொருவர் அப்பொழுதுதான் சமையற்கலை படித்து முடித்திருந்தவர். இரண்டு பேருமே சமையற்கலையில் வல்லுநர்கள். அவர்கள் எங்களிடம், "பிரதர், மதியம் நீங்கள் சாப்பிடக்கூடிய உணவை நாங்கள்தான் தயாரிக்கப் போகிறோம். நீங்கள் சாப்பிட்டு விட்டு அப்புறம் அது எப்படி இருக்கிறது என்று சொல்லுங்கள்" என்று சொன்னார்கள். நான் அவர்களிடத்தில், "நாங்கள் சென்னையில் இருந்து சாப்பிடுவதற்காகத் திருச்சிக்கு வரவில்லை. நீங்கள் தயவுசெய்து

நடக்கின்ற கூட்டத்தில் கலந்துகொண்டு இறை வார்த்தையைக் கேளுங்கள். அது உங்களுக்கு ஆசீர்வாதமாக இருக்கும்" என்று சொன்னேன். ஆனால் அவர்கள் அதைக் கேட்டபாடில்லை. "நாங்கள் சமைக்கிற உணவை சாப்பிட்டு விட்டு, நீங்கள் அதை அதன்பிறகு சொல்லுங்கள்" என்று அவர்கள் சொல்லிவிட்டார்கள். நானும் அவர்களை சம்மதிக்கப் பண்ண முடியாமல் விட்டு விட்டேன். அதே போல மதியம் எங்களை அதே இடத்திற்கு சாப்பிட அழைத்துச் சென்றார்கள். வாழை இலை விரித்து சீரகச் சம்பா அரிசியிலே செய்த மட்டன் பிரியாணி பரிமாறினார்கள். நானும் பிரியாணியை எடுத்து வாயில் வைத்தேன். அரிசி சுத்தமாக வேகவே இல்லை. என்ன இப்படி இருக்கிறது என்று இறைச்சியாவது சாப்பிடுவோம் என்று மட்டனை எடுத்து சாப்பிட்டுப் பார்த்தால், அது இன்னும் மோசம். சுத்தமாக வேகவே இல்லை. இதைத்தான் நாங்கள் சமைக்கிறோம், சாப்பிட்டுப் பாருங்கள் என்று இவர்கள் சொன்னர்களோ என்று நினைத்து எங்களுக்கு எதிரே நின்றுகொண்டிருந்த அந்த இருவரையும் ஏறிட்டுப் பார்த்தேன். அவர்கள் இருவருடைய கண்களிலும் கண்ணீர். "ஏன் இப்படி ஆகி விட்டது? எப்படி இப்படி நடந்தது என்றே எங்களுக்குத் தெரியவில்லை. நாங்கள் என்னென்னவோ செய்து பார்த்தோம். ஆனால் எங்களால் ஒன்றுமே செய்ய முடியவில்லை. இதுவரை இப்படி நடந்ததில்லை" என்று அவர்கள் சொன் னார்கள்.

ஏன் புயல் வீசுகிறது? பெருமையினால்தான். பெருமையினால்தான் சண்டை, பாவம், பிரச்சினைகள். பேதுரு கொஞ்சம் பெருமைப்பட்டவுடன் புயல் வீச ஆரம்பிக்கிறது. ஆண்டவர் தூங்குகிறார். பேதுரு தம் பெலத்தை எல்லாம் கொண்டு முயற்சி செய்கிறார். **பெருமை உள்ளவர்கள் எவ்வளவு பெலத்தைக் கொண்டு முயற்சி செய்தாலும், அவர்கள் வாழ்க்கையில் வீசுகிற புயல் அடங்காது.**

உங்கள் வாழ்க்கையில் புயல் அடித்துக்கொண்டு இருக்கு மானால், இப்போது உங்களைத் தாழ்த்தக் கற்றுக் கொள் ளுங்கள். நீங்கள் தாழ்த்தும்போது அந்தப் புயல் அடங்கி விடும். பேதுரு இப்போதுதான் நினைக்கிறார். இது நம் பெலத்தால் முடியாது, செத்து விடுவோம் என்று இயேசுவை எழுப்புகிறார்.

இயேசுவின் உதவி இல்லாமல் ஜீவிக்க முடியாது என்று புரிந்துகொண்டு அவர் இயேசுவை எழுப்புகிறார். இயேசு எழுந்த உடனே காற்றையும், கடலை யும் கடிந்து கொள்கிறார். “இரையாதே, அமைதியாக இரு” என்று சொல்கிறார். உடனே அமைதி உண்டாகிறது. ஆண்டவருடைய உதவி நமக்குத் தேவை. அதனால்தான் சொல்கிறார்: “**என்னையல்லாமல் உங்களால் ஒன்றும் செய்ய இயலாது.**”

தாழ்ச்சி உள்ளவர்கள் ஒவ்வொரு நிமிடமும் கடவு ளுடைய உதவியைக் கேட்பார்கள். ஆண்டவரே, நான் பரிசுத்தமாய் வாழ, நன்றாகப் பேச, சுகத்தோடும், பெலத் தோடும் வாழ, நான் தைரியமாக இருக்க, உம்முடைய உதவி தேவை என்று சொல்ல வேண்டும். எந்த இருட்டைக் கண்டும் பயப்படாத தைரியசாலிகள் சில நேரம் மனதில் பயத்தினால் பீடிக்கப்படுவதைப் பார்க்கிறோம். சிலர் நான் ஏன் இப்படி பயப்படுகிறேன் என்று எனக்கே தெரியவில்லை என்பார்கள். அவர்களுக்கு பயம் எப்படி வந்தது? கடவுள்தான் நமக்குத் தைரியத்தைக் கொடுத்திருக்கிறார் என்பதை உணரவில்லை. அதை உணர்ந்து, அதற்காக நாம் ஆண்டவருக்கு நன்றி சொல்ல வேண்டும். நாம் கடவுளை ஒவ்வொரு நிமிடமும் சார்ந்து கொள்ள வேண்டும்.

### பயத்தில் இருந்து விடுதலை

தாழ்மை என்றால் என்ன? கடவுள் நமக்கு ஒவ்வொரு நிமிடமும் தேவை என்பதை உணர்ந்து, திரும்பத் திரும்ப

*அவரிடம் போய் நிற்பதுதான் தாழ்மை. அகங்காரிகள் என்ன செய்வார்கள்? நான் இன்று காலையில் ஜெபம் செய்து விட்டேன். போதும். மீதி இருக்கும் நாள் முழுவதும் என் இஷ்டப்படி இருப்பேன். இதன் முடிவு எங்கே போய் நிற்கும்?*

*சாந்தோம் தேவாலயத்தில் ஜெபக் கூட்டம் நடந்தது. அன்று ஆண்டவர் என்னை பயத்தைக் குறித்துச் செய்தி கொடுக்கச் சொன்னார். ஜெபம் முடிந்த உடன் ஒரு சகோதரர் என்னைச் சந்திக்க வந்தார். அவர் என்னிடம், "நான் அமெரிக் காவில் வேலை பார்த்துக்கொண்டிருக்கிறேன். மூன்று மாத விடுமுறையில் சென்னைக்கு வந்தேன். இறைபுகழ்ச்சி தொடங் கும்போது நான் ஆலயத்தில் அமர்ந்திருந்தேன். நீங்கள் வந்து செய்தி கொடுக்க ஆரம்பிக்கும்போது நான் புறப்படுவதற்காக ஆலயத்தை விட்டு வெளியே வந்தேன். அப்போது நீங்கள் இன்று பயத்தைக் குறித்து ஆண்டவர் பேசச் சொன்னார் என்று செய்தி கொடுக்க ஆரம்பித்தீர்கள். என் மனதில் மூன்று மாத மாக ஒரே பயம். நான் என்னவெல்லாமோ செய்து பார்த்தேன். பயம் என்னை விட்டுப் போகவில்லை. அதனால் நான் திரும்ப வும் வந்து முழுச் செய்தியையும் அமர்ந்து கேட்டேன். இப்போது என் மனதில் உள்ள பயம் எல்லாம் போய்விட்டது" என்றார்.*

*நாம் பயம் இல்லாமல் இருப்பதற்குக் கூட கடவுளுடைய உதவி தேவை. அதனால்தான் ஆண்டவர் சொல்கிறார்: "என்னைப் பிரிந்து உங்களால் ஒன்றும் செய்ய இயலாது" என்று. பயத்தில் இருந்து ஆண்டவர் ஒருவர்தான் விடுதலை தர முடியும். தாவீது சொல்கிறார்:* **"எல்லா வகையான அச்சத் தினின்றும் ஆண்டவர் என்னை விடுவித்தார்"** *(திருப்பாடல். 34:4). ஒவ்வொரு நிமிடமும் கடவுளுடைய உதவி நமக்குத் தேவை. எதிர்காலத்தைக் குறித்து ஒரு பயம். வேலையைக்*

*குறித்து ஒரு பயம். இப்படிப்பட்ட பயத்தில் இருந்து நாம் விடுதலை பெற வேண்டுமானால், ஒவ்வொரு நிமிடமும் கடவுளுடைய உதவி நமக்குத் தேவை. ஆகையால் தாழ்ச்சி உள்ளவர்கள் தங்கள் நிலையை உணர்ந்து ஒவ்வொரு நிமிடமும் ஆண்டவருடைய உதவியை எதிர்பார்த்துக் கேட்பார்கள். ஆனால் ஆணவம் உள்ளவர்கள் எனக்கு உதவி தேவையில்லை என்பார்கள். ஒரு புனிதர் இவ்வாறு சொல்கிறார்:* **"உனக்கு எப்போதும் உதவி தேவை. அதனால் எப்போதும் ஜெபம் செய்" என்கிறார். இதைத்தான் "இடைவிடாமல் ஜெபம் செய்யுங்கள்"** *(1 தெசலோனிக்கர் 5:16) என்று விவிலியம் சொல்கிறது.*

----------

# 18. நிறைவான மகிழ்ச்சி உண்டு

*கடவுள் தாழ்ச்சியை விரும்புகிறார். தாழ்ச்சி உள்ளவர் களுக்கு மட்டும்தான் கடவுள் மகிழ்ச்சியைக் கொடுக்கிறார். தாழ்ச்சி உள்ளவர்கள்தான் எப்போதும் சந்தோஷமாக இருக்க முடியும். மற்றவர்களுக்கு ஆண்டவர் அந்த சந்தோஷத்தைக் கொடுப்பதில்லை. ஆனால் எல்லாரும் இந்த உலகத்தில் மகிழ்ச்சியை விரும்புகிறார்கள். ஆனால் எல்லாருக்கும் அது கிடைப்பதில்லை. கடவுள் அதைக் கொடுப்பதும் இல்லை. தாழ்ச்சி உள்ளவர்களுக்குத்தான் மன அமைதி, மகிழ்ச்சியைக் கொடுக்கிறார். உங்கள் உள்ளத்திலே அந்த சந்தோஷத்தை நீங்கள் இழந்து போய் இருந்தீர்களானால், மன அமைதியை இழந்து போய் இருந்தீர்களானால், எங்கேயாவது தாழ்மை இல்லாமல், பெருமைக்கு இடம் கொடுத்திருக்கிறோமா என்று யோசித்துப் பாருங்கள். நம்மை அறியாமலேயே சில பெருமைகள் நமக்குள் இருக்கலாம். அதுதான் நம்முடைய சந்தோஷத்தை எடுத்துக்கொள்கிறது; உண்மையான மகிழ்ச்சியை நாம் அனுபவிக்க முடியாமல் செய்கிறது. ஏனென்றால் விவிலியம் சொல்கிறது:* **“ஆண்டவருடைய சமூகத்தில் நிறைவான மகிழ்ச்சி உண்டு”** *(திருப்பாடல் 16:11). இந்த மகிழ்ச்சி நம்முடைய வாழ்க்கையில் இல்லை என்றால், ஆணவமும், பெருமையும் இந்த மகிழ்ச்சியை எடுத்து விட்டது. தாழ்ச்சி உள்ளவர்கள் மட்டும்தான் இந்த நிறைவான மகிழ்ச்சியை அனுபவிக்க முடியும்.*

*அன்னை மரியா இந்த மகிழ்ச்சியினால் நிரம்பி இருந் தார்கள். அதனால்தான் எலிசபெத்தை வாழ்த்தினார்கள். உடனே அந்த மகிழ்ச்சி எலிசபெத்துக்குள்ளும் வருகிறது. எலிசபெத் வயிற்றில் இருக்கும் கரு கூட இந்த மகிழ்ச்சியினால் துள்ளியது. ஏனென்றால் அன்னை மரியா மனத்தாழ்மையைக் கொண்டிருந்தார்கள். தாவீது தன்னைத் தாழ்த்துகிறவராய்*

*இருந்ததனால்தான்* **''தானியமும், திராட்சையும் நன்கு விளையும் காலத்தில் அடையும் மகிழ்ச்சியை விட மேலாக மகிழ்ச்சியை நீர் என் உள்ளத்திற்கு அளித்தீர்''** *(திருப்பாடல்கள் 4:7) என்று சொல்கிறார். தாழ்மை உள்ளவர்களுக்கு தேவன் இந்த மகிழ்ச்சியைக் கொடுக்கிறார். தாழ்த்த முடியாதவர் களின் வாழ்க்கையில், அமைதி இருப்பதில்லை.*

**திருமுழுக்கு யோவானுடைய மனத் தாழ்மை**

*அந்தக் காலத்தில் மக்கள் மெசியா வரப் போகிறார் என்று எதிர்பார்த்துக் காத்திருக்கின்றனர். யூதர்களுடைய வாழ்க்கை யில் 'மெசியா' என்றால் அவர்தான் கடவுளுடைய மகன். அவருக்கு எதை வேண்டுமானாலும் செய்வதற்கு அந்த யூதர்கள் தயாராக இருந்தார்கள். மெசியாவுக்காக உயிரைக் கொடுப் பதற்குக் கூட அவர்கள் தயங்க மாட்டார்கள். தங்களுடைய உடமைகளை விற்றுக்கொடுக்கவும் யோசிக்க மாட்டார்கள். அந்த அளவுக்கு மெசையாவின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அந்தச் சூழ்நிலையில்தான் இந்தப் பரிசேயரும், யூத குருக்களும், எல்லா மக்களும் யோவான்தான் மெசியாவாக இருக்க வேண்டும்; ஆகையினால்தான் அவர் திருமுழுக்குக் கொடுக்கிறார் என்று நினைத்தார்கள். ''நீர் மெசியாவா?'' என்று அவரிடம் கேட்டார்கள்.*

*யோவான் ஒரே ஒரு வார்த்தை - ஆம் என்று சொன்னால் அவருக்கு ராஜ மரியாதை கிடைத்திருக்கும். அவருக்காக எல்லாவற்றையும் செய்திருப்பார்கள். யோவான் ஒரு பொய் சொல்லியிருந்தால் எல்லாமே கிடைத்திருந்திருக்கும். இன்றைக்கு நீங்கள் யோசித்துப் பாருங்கள். பணத்திற்காக எவ்வளவு கிறீஸ்தவர்கள் பொய்யும், பித்தலாட்டமும் செய்கிறார்கள்! ஆனால் யோவான் வெளிப்படையாக, ''நான் மெசையா இல்லை'' என்கிறார். பின் அவர்கள் ''எலியாவா?'' என்று கேட்கிறார்கள். இயேசுவே யோவானைப்*

*பார்த்து, "வரப் போகிற எலியா" என்று சொல்கிறார். ஆனால் யோவான் "நீர் எலியாவா?" என்று கேட்டதற்கு, "இல்லை" என்கிறார்.*

*மீண்டும் "தீர்க்கதரிசியா?" என்று கேட்கிறார்கள். அதற்கு "ஆம்" என்று சொன்னால் நிறைய காணிக்கையாவது கொடுத்திருப்பார்கள். ஆனால் அதற்கும், "இல்லை" என்கிறார். பின் "நீர் யார்?" என்று கேட்டதற்கு, யோவான் சொல்கிறார்: "எசாயா தீர்க்கதரிசி எழுதிய, பாலை நிலத்தில் கூப்பிடுகிற ஒரு சத்தம்; அதுதான் நான்" என்கிறார். "***நான் தண்ணீரால் ஞானஸ்நானம் கொடுக்கிறேன். எனக்குப் பின்னால் வருகிறவரின் மிதியடி வாரை அவிழ்க்கக்கூட எனக்குத் தகுதி இல்லை***" *என்கிறார். விவிலியத்தில் யோவான் தாம் மெசியா இல்லை என்பதை வெளிப்படையாக ஒப்புக்கொண்டார் என்று வாசிக்கிறோம். இன்றைக்குப் பலர் தங்களைப் பற்றி உயர்வாக நினைக்கிறார்கள். எந்த உயர்வுக்கும் நாம் தகுதியான வர்கள் அல்ல. இதை எத்தனை பேர் நாம் வெளிப்படை யாக ஏற்றுக்கொள்வோம்? நாம் அவர்களிடம், "நீங்கள் நினைப்பது போல நான் மோசமானவன் இல்லை" என்று சொல்வோம். பலர் அப்படித்தான் நினைத்துப் பெருமைப்படு கிறார்கள்.*

----------

## 19. தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுகிறான்

*நாம் யார் என்பதை ஏற்றுக்கொள்வதுதான் தாழ்ச்சி. உண்மையை வெளிப்படையாக ஏற்றுக்கொள்வதுதான் தாழ்மை. அது சில நேரங்களில் நமக்கு வேதனையாகக் கூட அமையலாம். சிலர் அடுத்தவர்களிடம் நம்மைப் பற்றி வேறு விதமாகப் பேசக்கூட செய்யலாம். ஒன்றுக்கு நாலாகக் கூட பேசலாம். ஆனால் யார் என்ன சொன்னாலும் உண்மையை ஏற்றுக்கொள்வதுதான் தாழ்மை. இப்படித் தன்னையே தாழ்த்துகிறவர்களைத் தேவன் உயர்த்துகிறார். தன்னையே உயர்த்திக்கொள்கிறவர்களைத் தேவன் தாழ்த்துகிறார். உங்க ளையே ஆராய்ந்து பாருங்கள். எந்தப் பக்கம் இருக்கிறீர்கள்? தன்னைத் தானே உயர்த்துகிறவர்கள் இடத்தில் வருவோமா? நம்மைத் தாழ்த்தும்போது, கடவுள் தம் கிருபையைக் கொண்டு உயர்த்துகிறார். ஆண்டவர் நம்மை மீட்டுக்கொள்கிறார். நம் கையைப் பிடித்து நம்மைத் தூக்குகிறார். கடவுளுடைய பிள்ளைகள் நம்மை நாமே தாழ்த்திக்கொள்ள வேண்டும். அப்படித் தாழ்த்தும்போதுதான் தேவன் உங்களை உயர்த்துவார்.*

**தானியேலுடைய மனத்தாழ்மை**

*தானியேல் நூலில் இதை வாசிக்கிறோம் (தானியேல்* ***2:1-13).*** *ராஜா ஒரு கட்டளை கொடுக்கிறார். ராஜா தான் கண்ட கனவையும், அதன் பொருளையும் சொல்லச் சொல் கிறார். அப்போது அங்கு இருந்த ஞானிகள் ராஜாவிடம்: "நீர் கனவைச் சொல்லும். நாங்கள் பொருளைச் சொல்கிறோம்" என்கிறார். அதற்கு ராஜா இரண்டையும் சொல்லச் சொல் கிறார். அதற்கு அவர்கள், அது யாராலும் முடியாது என்கிறார்கள். உடனே ராஜா, "கனவையும், விளக்கத்தையும் சொல்லவில்லை என்றால் அனைவரின் தலையையும் வெட்டி விடுவேன்" என்கிறார். அப்போது தானியேல் தம் நண்பர்*

*களோடு சேர்ந்து தேவ சமூகத்தில் ஜெபிக்கிறார். அப்படி ஜெபிக்கும்போது ஆண்டவர் அதை வெளிப்படுத்துகிறார். ராஜாவிடம் தானியேல், "நீர் படுத்திருக்கும்போது எதிர்காலத் தில் நடக்கவிருப்பதை ஆண்டவர் உமக்குக் காண்பித்தார்" என்று தானியேல் சொல்லும்போது, ராஜா தான் படுத்திருப் பதையும், நினைத்ததையும், கனவு கண்டதையும் சொல் கிறானே, தானியேல் ஒரு பெரிய ஆள் என்று நினைக்கிறான். உடனே தானியேல் சொல்கிறார்:* **"ஆனால் என்னைப் பொறுத்த மட்டில் மற்றெல்லா உயிர்களையும் விட நான் ஞானம் மிக்கவன் என்பதால் எனக்கு வெளிப்படுத்தப்படவில்லை. ஆனால் அரசருக்கு அதன் உட்பொருளைத் தெரிவிக்கவும், உமது இதயத்தின் நினைவுகளை நீர் அறிந்துகொள்ளவும் அவை எனக்கு வெளிப்படுத்தப்பட்டுள்ளன"** *(தானியேல் 2:30). ராஜா தன்னை உயர்வாக நினைத்த உடனேயே, தானியேல் தம்மைத் தாழ்த்துகிறார். எவ்வாறு? நான் ஞானி என்பதால் ஆண்டவர் வெளிப்படுத்தவில்லை. ராஜாவுக்குத் தெரிவிப்பதற்காக வெளிப்படுத்தப்பட்டது என்கிறார். அதனால்தான் ஆண்டவர் தானியேலை உயர்த்துகிறார். தன்னைத்தானே தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுகிறான். தன்னைத்தானே உயர்த்துகிறவன் தாழ்த்தப்படுவான். உங்களை யாராவது பெருமையாக நினைத் தால் உங்களைத் தாழ்த்துங்கள். ஆண்டவர் உங்களை உயர்த்துவார்.*

*யோவான் தம்மைத் தாழ்த்துகிறார். தானியேல் தம்மைத் தாழ்த்துகிறார். அப்போஸ்தலர்கள் தங்களைத் தாழ்த்து கிறார்கள். பிறவி முடவனைப் பேதுரு இயேசு கிறீஸ்துவின் பெயரால் காலூன்றி நிற்க வைக்கிறார். அங்குள்ள ஜனங் களைப் பார்த்து, பேதுருவும், யோவானும், "எங்களை ஏன் இவ்வாறு பார்க்கிறீர்கள்? எங்களுடைய ஆற்றலால் அல்ல, நீங்கள் சிலுவையில் அறைந்து கொன்ற* **இயேசுகிறீஸ்துவின் பெயரே இவனுக்கு வலுவூட்டியது"** *(திருத்தூதர் 3:12-16)*

என்றார். அதனால்தான், ஆண்டவர் அவர்களை உயர்த்து கிறார்.

இரண்டு பேர் பேய் பிடித்த பெண்ணுக்காக ஜெபிக்கப் போனார்கள். ஒருவன் அந்தப் பெண்ணின் தலையில் கை வைத்தான். இன்னொருவன் ஜெபம் செய்தான். பேய் ஓடி விட்டது. ஒருவன் நான் கை வைத்ததால் தான் பேய் ஓடியது என்றான். இன்னொருவன் நான் ஜெபம் செய்ததால் தான் ஓடியது என்றான். இரண்டு பேரும் முட்டிக்கொண்டார்கள். இப்போது அந்தப் பெண்ணை விட்டு ஓடிய பேய் இவர்களுக் குள்ளாக வந்து விட்டது. இன்றைக்கு நிறைய ஜெபிப்பவர் களுடைய நிலைமை இப்படித்தான். தன்னுடைய திறமை யினால் ஏதோ சாதித்து விட்டதைப் போல நினைக்கிறார்கள். பெயருக்குப் பின்னால் நிறையப் பட்டம் போடுவது போல வரம் பெற்ற ஊழியர்கள், தீர்க்கதரிசன வரம் பெற்றவர்கள் என்று போடுகிறார்கள். அந்த வரம் உங்களுக்குச் சொந்த மானதா? நீங்கள் படித்து வாங்கின பட்டமா? ஆவியானவ ருடைய வரம் அது. எந்தவொரு தூசியின் மூலமாகவும் எந்த வரத்தையும் செயல்படுத்த ஆண்டவரால் முடியும். நிறைய கிறிஸ்தவர்கள் ஜெபிக்கிறவர்களாக இருந்தாலும் கூட, நல்லவர் களாக இருந்தாலும் கூட, பெருமையினால் அவர்கள் தங்களை உயர்த்திக்கொள்வதால் கடவுள் அவர்களுக்கு உதவி செய்ய முடியாத நிலைக்கு அவர்கள் போய்விடுகிறார்கள். தேவனால் உயர்த்தப்பட முடியாத நிலைக்கு அவர்கள் போய்விடு கிறார்கள்.

எனக்குத் தெரிந்த ஊழியர் ஒருத்தர் திடீர்னு அதிகமாக சுகமில்லாமல் போய்விட்டார் என்று கேள்விப்பட்டு அவரைப் பார்ப்பதற்காக அவருடைய வீட்டுக்குப் போனேன். என்னைப் பார்த்த உடனே அழுதுகொண்டே வீட்டிற்குள் அழைத்துக் கொண்டு போனார்கள். அதன் பிறகு என்ன நடந்தது என்று

விசாரித்தேன். அவர் பட்ட கஷ்டத்தையெல்லாம் என்னிடம் சொன்னார். அவர்கள் வீட்டில் வழக்கமாக ஜெபம் நடக்கும். அந்த ஜெபத்திற்கு சாயங்காலத்தில் ஆட்கள் வந்து இருந் தார்கள். திடீர்னு அவர் அப்படியே நிலைகுலைந்து கீழே விழுந்து பேச்சு மூச்சு இல்லாமல் போய்விட்டார். உயிரே என்னை விட்டு மேலே வந்து விட்டது என்று சொன்னார். உடனே அங்கிருந்தவர்கள் ஆண்டவரிடம் அழுது ஜெபித்திருக் கிறார்கள். கடைசியில் கொஞ்சம் நேரத்திற்குப் பிறகு நன்றாக ஆகிவிட்டார். ஏன் இப்படி ஆயிற்று என்று தெரியவில்லை என்று சொன்னார். இதைக் கேட்ட பிறகு நாம் ஜெபிப்போம் என்று சொல்லி நான் ஜெபிக்கும்போது ஆண்டவர் எனக்கு ஒரு காட்சியை காண்பித்தார். நான் சொன்னேன் "பிரதர், நீங்கள் ஜெபிச்சு மூணு வாரத்துக்கு மேல ஆகுது. அது மட்டும் இல்லாம நான் ஒரு தேர் பார்க்கிறேன். அந்த தேரில் ஆண்டவர் இருக்க வேண்டிய இடத்துல நீங்க உங்கள வச்சிருக்கீங்க. மனுஷன் ஒரு தூசி, ஒன்றுமில்லை என்று உங்களுக்குக் காட்டு வதற்காகத்தான் ஆண்டவர் இதை உங்களுக்கு அனுமதித்தார்" என்று சொன்னேன். நாம் எப்படிப்பட்டவராக இருந்தாலும் சரி, ஆண்டவரைத்தான் உயர்த்த வேண்டுமே தவிர, அவரை வைக்க வேண்டிய இடத்தில் நம்மை வைத்து நம்மையே நாம் உயர்த்தவே கூடாது. நாம் நம்மைத் தாழ்த்தினால் தேவன் நம்மை உயர்த்துவார்.

------------

# 20. ஜெபம் எப்படி இருக்க வேண்டும்?

*தாழ்ச்சி உள்ளவர்களுடைய ஜெபம் எப்படி இருக்க வேண்டும்? தாழ்ச்சி உள்ளவர்கள் தேவனிடத்தில் வரும்போது தேவனை நோக்கி எப்படி ஜெபிப்பார்கள்? நிறைய வார்த்தை களைச் சொல்லி மனிதர்கள் கடவுளிடத்தில் ஜெபிக்கிறார்கள். அந்த ஜெபங்களில் சில ஜெபங்கள் மட்டும்தான் தாழ்ச்சி உள்ள ஜெபங்களாக இருக்கின்றது. பலர் கடவுளிடத்தில் ஜெபிக்கும்போது கூட ஒரு தாழ்ச்சியான வார்த்தையைப் பேசுவதில்லை. பல பேர் ஆண்டவரிடத்தில் தகாத வார்த்தைகளைப் பேசுகிறார்கள். ஆகையினால்தான், மலாக்கி **2:17**ல், "உங்கள் பேச்சுகளினால் ஆண்டவரைச் சோர்வடையச் செய்யாதீர்கள்." மலாக்கி **3:13**ல், "எனக்கு எதிராக நீங்கள் கடுஞ்சொற்களை உதிர்த்து வந்தீர்கள்" என்கிறார் ஆண்டவர்.*

## ஆபிரகாமின் ஜெபத் தாழ்மை

*சிலர் கோவிலுக்குப் போனால் கூட, ஜெபம் செய்யும் போது, தேவ சமூகத்திலே தங்களைத் தாழ்த்துவது இல்லை. மாறாகத் தங்களை உயர்த்துகிறார்கள். கடுமையான வார்த்தை களைப் பேசுகிறார்கள். இதை எல்லாம் கடவுள் விரும்ப வில்லை. சில பேரைக் கேட்டால், ஆண்டவரிடம் சண்டை போட்டு விட்டு வருகிறேன் என்பார்கள். அப்படிப்பட்ட வார்த்தைகளைப் பேசக்கூடாது. அது ஆணவத்துடைய வெளிப்பாடு. அதற்குப் பதிலாகக் கடவுளுடைய ஊழியர்கள் எப்படித் தங்களைத் தாழ்த்தினார்கள் என்று பார்க்க வேண்டும்.*

*விசேஷமாக, ஆபிரகாம் தம்மை எப்படித் தாழ்த்தினார்?* **"என் தலைவரே, உம் கண்களில் எனக்கு அருள் கிடைத்த தாயின், நீர் உம் அடியானை விட்டுக் கடந்து போகாதிருப்பீராக!"** *(தொடக்க நூல் **18:3**). நாம்தான் பெரிய பெரிய வார்த்தை களைச் சொல்கிறோம். ஆனால் ஆபிரகாம் எப்படி*

*ஜெபிக்கிறார் பாருங்கள். எனக்கு உம்முடைய கண்களில் தயவு கிடைத்ததாயின் என்னை விட்டுப் போகாதிரும் என்கிறார். எத்தனை பேருக்கு ஆண்டவருடைய சமூகத்தில் இப்படி ஜெபிக்கும் பழக்கம் உண்டு? விசுவாசத்தின் தந்தை என்று பெயர் பெற்ற ஆபிரகாம். ஆண்டவர்: "என் ஊழியன் ஆபிர காம்," "என் நண்பன் ஆபிரகாமிடம் எதையும் சொல்லாமல் மறைப்பேனா?" என்கிறார். ஆனால் ஆபிரகாம் ஆண்டவரிடம் எப்படிப் பேசுகிறார்?*

"**ஆண்டவரே! உம்முடைய கண்களில் எனக்குத் தயவு கிடைத்தால்**" *(தொடக்க நூல் 18:3). நாம் நிறைய வார்த்தை களைச் சொல்கிறோம். ஆபிரகாம்,* "**தூசியும் சாம்பலுமான நான் என் ஆண்டவரோடு பேசத் துணிந்து விட்டேன்**" *(தொடக்க நூல் 18:27) என்கிறார். ஒரு விண்ணப்பத்தை வைப்பதற்கு ஆபிரகாம் இப்படி ஜெபம் செய்கிறார்.*

*ஊழியர் ஒருவரை ஆண்டவர் பல முறை பரலோகத்திற்கு அழைத்து சென்றிருக்கிறார். அந்த ஊழியர் பல முறை வான தூதர்களை பார்த்திருக்கிறார். அப்படி வானதூதர்களை பார்த் ததால் அவர் தன் பெயரில் கூட ஏஞ்சல் என்று சேர்த்துக் கொண்டார். பரலோகத்தையும், நரகத்தையும் பார்த்திருக் கிறார். அவர் ஒரு நாள் தனக்கு நடந்த ஒரு காரியத்தை வெளிப்படுத்துகிறார். வீட்டில், அவர் ஒரு அறையிலும், அவரின் மனைவி மற்றொரு அறையிலும் இருந்தார்கள். இவர் ஜெபம் செய்துகொண்டிருக்கும்போது, இவருடைய அறையில் ஒரு வானதூதர் வந்து நின்றார். இந்த ஊழியர் வானதூதரோடு பேசிக்கொண்டிருந்தபோது, அவருக்கு ஒரு ஆசை வந்தது. அது என்னவென்றால், நான் அநேக தடவை வானதூதர்களைப் பார்த்து இருக்கிறேன். என் மனைவி ஒரு முறை கூட வான தூதரைப் பார்க்கவில்லை. அதனால் உடனே முழங்காலில் நின்று, "ஆண்டவரே, உம்முடைய கண்களில்*

*எனக்குத் தயவு கிடைத்தால் நான் பார்க்கின்ற இந்த வான தூதரை என் மனைவியும் பார்க்கட்டும்" என்று ஜெபிக்கிறார்.*

*ஒரு வானதூதர் வந்து நிற்கும்போது கூட அவர் எப்படி ஜெபிக்கிறார்? உம் கண்களில் எனக்கு தயவு கிடைத்தால் என்று ஆபிரகாம் போல ஜெபிக்கிறார். அப்போது ஆண்டவர் சொன்னாராம்: வானதூதர்கள் எல்லா இடத்திலும் நிறைந்து இருக்க முடியாது. இங்கு இருக்கின்ற வானதூதர் பக்கத்து அறையிலும் இருக்க முடியாது. அதனால் உனக்காக ஒரு காரியத்தைச் செய்கிறேன் என்று சொல்லி, அந்த ஊழியருக்கும் அவர் மனைவிக்கும் நடுவில் இருந்த சுவர் விலகிப் போய்விடச் செய்தார். அப்போது அவரின் மனைவி அந்த வானதூதரைப் பார்த்தார். ஆண்டவரிடத்தில் கிருபையைப் பெற்றுக்கொண்டவர்கள் கூட, தேவ சமூகத்திலே ஜெபிக்கும்போது எப்படி ஜெபிக்கிறார்கள்? உமது கண்களில் தயவு கிடைத்தால் என்று ஜெபிக்கிறார்கள்.*

**தாவீதின் ஜெபத் தாழ்மை**

*தாவீது அரசர் அப்படித்தான் ஜெபிக்கிறார்.* **"ஆண்டவரே, ஒரு பணியாளுடைய பார்வை தன் தலைவரைப் பார்த்துக் கொண்டிருப்பது போல, ஒரு பணிப்பெண்ணின் பார்வை தன் எஜமானியின் கையை நோக்கியிருப்பது போல, நீர் எனக்கு இரக்கம் காட்டுகிற வரைக்கும் என் கண்கள் உம்மை நோக்கிக் கொண்டே இருக்கும்"** *(திருப்பாடல் 123:2) என்கிறார்.*

*கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். நம்முடைய ஜெபம் எப்படி இருக்கிறது? தேவனிடத்தில் இவ்வளவு கிருபையைப் பெற்றுக்கொண்டவர்கள் தங்களுடைய ஜெப நேரத்தில் தங்களைத் தாழ்த்தி ஜெபிக்கிறார்கள். ஆனால் ஆவிக்குரிய வாழ்க்கையில் நன்றாக வளரக்கூட இல்லை. ஆனால் நம்முடைய வார்த்தைகள் எவ்வளவு மேட்டிமையாக இருக்கிறது! தேவன் விரும்பாத பல வார்த்தைகளைப் பேசுகிறோம்.*

*ஆண்டவருடைய பிள்ளைகள் தேவ சமூகத்தில் ஜெபிக்கும் போது, தாழ்ச்சி உள்ள வார்த்தைகளைப் பேசக் கற்றுக்கொள்ள வேண்டும்.*

**''இளைஞர்களே, நீங்கள் முதியவர்களுக்குப் பணிந் திருங்கள். ஒருவர் மற்றவரோடு பழகும்போது எல்லாரும் மனத் தாழ்மையை ஆடையாய் அணிந்திருங்கள்''** *(1 பேதுரு 5:5). மனிதர்கள் மனிதர்களோடு பேசும்போது கூட மனத்தாழ்மை யோடு பேசுங்கள் என்கிறார். அப்படி என்றால் தேவாதி தேவ னோடு ஜெபிக்கும்போது எவ்வளவு தாழ்மையோடு ஜெபிக்க வேண்டும் என்று நினைத்துப் பாருங்கள் இவர்கள் எல்லாரும், "ஆண்டவரே, உமது கண்களில் தயவு கிடைத்தால்" என்று சொன்னார்கள். அந்த ஜெபத்தை ஆண்டவர் கேட்டார். இன்று பல நேரங்களில் நம்முடைய ஜெபங்கள் தாழ்மை இல்லாமல் இருப்பதனால் கேட்கப்படாமல் இருக்கிறது. தாழ்ச்சி உள்ள ஜெபங்களுக்கு தேவன் எப்போதுமே செவிகொடுக்கிறார். அதனால்தான் சொல்கிறார்: தன்னைத்தானே தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுகிறான்.*

**நல்ல கள்ளனின் தாழ்ச்சி**

**சிலுவையில் தொங்கிக் கொண்டிருந்த குற்றவாளிகளுள் ஒருவன், "நீ மெசியாதானே. உன்னையும் எங்களையும் காப் பாற்று'' என்று பழித்துரைத்தான்** *(லூக்கா. 23:39). இது சாதாரணமாக எல்லாக் கிறீஸ்தவர்களும் உபத்திரவங்களில் செய்யக்கூடிய ஜெபம். "ஆண்டவரே, என்னைக் காப்பாற்றும். அப்போதுதானே நீர் மெசியா என்று நம்புவார்கள். அப்போது தானே உம்மை உயர்த்துவார்கள்." பாடுகள் வரும்போது செய்யக் கூடிய ஜெபம் என்ன? கெட்ட கள்ளனுடைய ஜெபம். அந்தக் கள்ளனை எல்லாரும் கெட்ட கள்ளன் என்று சொல் கிறோம். நாம் எல்லோரும் எந்தப் பட்டியலில் இருக்கிறோம் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். ஆனால் மற்றவன்*

*அவனைக் கடிந்துகொண்டு,* **"கடவுளுக்கு நீ அஞ்சுவதில் லையா? நீயும் அதே தீர்ப்புக்குத்தானே உள்ளாகி இருக்கிறாய். நாம் தண்டிக்கப்படுவது முறையே. நம் செயலுக்கு ஏற்ற தண்டனையை நாம் பெறுகிறோம்"** *(லூக்கா. 23:40,41). நாம் தண்டிக்கப்படுவது சரியானதே. இந்த வேதனைக்கு உண்மை யிலே நாம் பாத்திரவான் என்கிறான். உங்கள் வாழ்க்கையில் நீங்கள் செய்திருக்கிற பாவங்களுக்கு உங்களுக்கு என்ன தண்டனை கொடுத்தாலும் தகும். ஆனால் தகுதியான தண்டனையை ஆண்டவர் கொடுப்பதில்லை. கொஞ்சம்தான் கொடுக்கிறார். பாத்திரவானாய் இருக்கிற நீ, "நான் என்ன செய்தேன்? எனக்கு இந்தத் தண்டனை எதற்கு?" என்று கேட் கிறாய். "எனக்கு எதுக்கு இந்த பாடு?" என்று கேட்கிறாய். பாடு களுக்கு நீ பாத்திரவான் என்பதை அறியாமல் பரிசுத்தவானைப் போல கேள்வி கேட்கிறாய். இந்தக் கள்ளன் எவ்வளவு தாழ்த்து கிறான். நான் இந்த தண்டனைக்கு பாத்திரவான் என்கிறான். இந்த வேதனைக்கு நான் பாத்திரவான் என்கிறான். அதுதான் உண்மை. கிறீஸ்தவர்களும், ஊழியர்களும் எனக்கு ஏன் இப்படி வந்தது என்று ஜெபிக்கிறீர்களா? அல்லது இந்த உபத்திரவத் திற்கு நான் தகுதியானவன் என்று ஜெபிக்கிறீர்களா? நான் தகுதியானவன் என்பது தானே உண்மை. அப்படியென்றால் என்ன சொல்ல வேண்டும்? ஆண்டவரே, இந்தப் பாடுகளுக்கு நான் பாத்திரவான். இதை விடக் கீழான வேதனைக்கும் தகுதியானவன் என்று சொல்லி இருக்க வேண்டும். யாராவது அப்படி ஜெபிக்கிறோமா? பெரிய ஆள் மாதிரி நினைத்துக் கொண்டு எனக்கு ஏன் இப்படி என்கிறோம். கள்ளனுக்கு இருக்கிற தாழ்ச்சி கூட அவருடைய சொந்தப் பிள்ளைகளுக்கு இல்லை. நாம் எத்தனையோ நாள் ஆண்டவரிடம் பழகி யிருக்கிறோம். ஆனால் அந்தக் கள்ளன் ஒரு நாளில் கற்றுக் கொண்டானே! ஆனால் நீ ஒவ்வொரு நாளும் கற்றுக்கொள் கிறேன், கற்றுக்கொள்கிறேன் என்று சொல்கிறாய். இன்னும்*

கற்றுக்கொள்ளவில்லையே. அழகாகச் சொல்கிறான், இந்தப் பாடுகளுக்கு நான் பாத்திரவான் என்கிறான். உங்களுக்கு வரக் கூடிய பாடுகளை விட, உபத்திரவங்களை விட நான் நல்லவன் என்பவர்கள் இருந்தால் சொல்லுங்கள். அப்படி என்றால் பாடுகளில் என்ன சொல்ல வேண்டும்? இந்தக் கள்ளனைப் போல் ஜெபித்திருந்தால் ஆண்டவர் கிருபையாய் இரங்கி இருப்பார். இன்றைக்கே நீ என்னோடு பரலோகத்தில் இருப் பாய் என்று உடனே பதில் வந்திருக்கும். பரலோகத்திற்குத் தகுதியானவன் என்று சொல்கிறார்.

நடந்த ஒரு காரியத்தைச் சொல்கிறேன். துறவி ஒருவர் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். அவர் இரவு தங்குவதற் காக ஒரு சத்திரத்திற்குச் சென்றார். ஏற்கனவே அதிக நேரமாகி விட்டது. அந்த விடுதிக் காப்பாளர் இங்கே படுப்பதற்கு எந்த இடமும் இல்லை. ஆனால் திண்ணையின் கீழே ஒரு இடம் இருக்கிறது. மேலே படுத்திருக்கிறவர் ஒரு ஆஸ்துமா நோயாளி. அவர் அடிக்கடி இருமிக்கொண்டு இருப்பார் என்று சொன் னார். படுப்பதற்கு வேறு இடம் இல்லாததினால் துறவி அந்தத் திண்ணைக்குக் கீழே படுத்துக்கொண்டார். மேலே படுத்திருந் தவருக்குத் தனக்குக் கீழே ஒருவர் படுத்திருக்கிறார் என்பது தெரியாது. ஆகவே அவர் இரவு முழுவதும் இருமி சளியை எல்லாம் காறிக் கீழே துப்புவதாக நினைத்து அந்தத் துறவி மேலே துப்பிக்கொண்டே இருந்தார். காலையில் எழுந்தபோது அவர் தான் தரை மேல் துப்பவில்லை, ஒரு மனிதர் மேல் துப்பி விட்டோம் என்று பார்த்து அதிர்ச்சியடைந்தார். உடனே அவர், “ஐயோ, நான் தெரியாமல் இப்படி உங்கள் மேல் துப்பி விட்டேன். என்னை மன்னித்துக்கொள்ளுங்கள்” என்று மிக வருத்தத்தோடு அவரிடம் மன்னிப்புக் கேட்டார். ஆனால் அந்தத் துறவியோ, “நீங்கள் ஒன்றும் வருத்தப்பட வேண்டாம். ஏனென்றால் இதை விட மோசமாக நடத்தப்படுவதற்கு நான் தகுதியானவன்” என்று சொல்லித் தம்மைத் தாழ்த்தினார்.

அவமானங்கள், பாடுகள், வேதனைகள், நெருக்கடிகள் வரும்போது உங்களுக்கு எதிராக மற்றவர்கள் இல்லாதது பொல்லாதது சொல்லும்பொழுது தேவ சமூகத்தில் உங்களைத் தாழ்த்துங்கள். இந்த அவதூறுக்கு நான் தகுதியானவன். இந்த உபத்திரவங்களுக்கு நான் தகுதியானவன் என்று சொல்லுங்கள். ஆண்டவரே, இந்தப் பாடுகளுக்கெல்லாம், இன்னும் கீழான வைகளுக்கும் நான் தகுதியானவன் என்று சொல்லித் தாழ்த் துங்கள். அதை விட்டுவிட்டு உன்னை நீ பெரிய ஆளாகக் காட்டிக்கொள்வதைத்தான் ஆங்காரம் என்று சொல்கிறார். இயேசு உபத்திரவப்படும்போது, ஏன் எனக்கு இப்படி என்று கேட்கவில்லை. இதற்காகத்தான் நான் வந்தேன் என்று சொல்லி ஏற்றுக்கொண்டார். உம்முடைய சித்தத்தின்படி எனக்கு ஆகட்டும் என்று சொல்லி விட்டார். அவர் தேவ குமாரன்; அவர் நினைத்தால் அதைத் தள்ளியிருக்கலாம். ஆனால் அவர் அதைத் தள்ளவில்லை. தம்மைத் தாழ்த்தினார். ஆனால் இன்று கிறீஸ்தவர்களுக்கு இந்தத் தாழ்ச்சி இல்லாததால்தான் ஏகப் பட்ட புலம்பல், ஏகப்பட்ட பிரச்சினை. நீங்கள் இப்படி உங்களைத் தாழ்த்தி ஜெபம் செய்வதை உங்களைச் சுற்றி இருப் பவர்கள் யாராவது பார்த்து இருந்தால், கட்டாயம் உங்கள் ஆணடவர் உண்மையுள்ளவர் என்று சொல்லி இருப்பார்கள். உபத்திரவத்திலும், பாடுகளிலும், “இதற்கு நான் பாத்திரவான் இதை விட மோசமானதுக்கும் நான் பாத்திரவான். ஆண்டவர் என்னை அந்த அளவுக்கு விடவில்லையே. எவ்வளவோ நன்றாக வைத்திருக்கிறார்” என்று சொல்லியிருந்தால், உன் கூட இருப்பவன் அதைக் கேட்டால் மாறி இருப்பான்.

நீ போய்ப் புலம்புகிறாய். ஊழியரிடம் வந்து, நான் என்ன பாவம் பண்ணினேன்? கடவுள் என்னை இப்படிக் கொடுமைப் படுத்துகிறார் என்று புலம்புகிறோம். ஆனால் அவர் நீதி இல்லா தவரா? அநியாயமாக அவர் உன்னைத் தண்டித்தாரா? தாழ்ச்சி யோடு அவருடைய சமூகத்தில் இந்தப் பாடுகளுக்கு நான்

*பாத்திரவான் என்று ஏன் சொல்லக் கூடாது? பைபிளைக் கையில் எடுக்கிற எல்லாரிடமும், மக்கள் எதிர்பார்ப்பது இந்தத் தாழ்ச்சியைத்தான். இருதயத்திலே தாழ்ச்சி இருக்கிறதா? தாழ்ச்சி உள்ளவர்களுக்குக் கிருபை அளிக்கிறார். ஆண்டவ ருடைய கிருபையைப் பெற்றுக்கொள்வதற்கு ஒரே ஒரு வழிதான். வேறு எந்த வழியிலும் ஏமாற்றி அவரிடம் வாங்க முடியாது. அவர் இதயத்தைப் பார்க்கிறார். ஆச்சரியமாக இருக்கிறது. ஒரு திருடன் ஒரு மணி நேரம்தான் ஆண்டவரைச் சந்தித்திருப்பான். அதுவும் சிலுவையின் பக்கத்தில் கூட போயிருக்க மாட்டான். பைபிள் கூடப் படித்திருக்க மாட் டான். கொஞ்ச நேரம் இயேசுவைப் பார்க்கும்போதே தாழ்ச்சியைக் கற்றுக்கொண்டான். நாம் எத்தனை வருடம் ஜெபிக்கிறோம், இன்னும் கற்றுக்கொள்ளவில்லையே. ஒவ்வொரு நாளும் ஆண்டவரின் சமூகத்தில் தாழ்ச்சியைக் கற்றுக்கொள்ளுங்கள். இதைத்தான் வலது பக்கத்துக் கள்ளன் ஜெபிக்கிறான். சிலுவையில் இன்னொரு பக்கத்தில் தொங்கும் கள்ளனைக் கடிந்துகொள்கிறான். "உனக்கு இறையச்சம் இல்லையா? என்ன வார்த்தை பேசுகிறாய்?* **நாமோ செய்த தவறுகளுக்காகத் தண்டிக்கப்படுகிறோம்.** *அது நியாயமானது. ஆனால்* **இவரோ ஒரு குற்றமும் அறியாதவர்**" *என்கிறார். பின் ஆண்டவரைப் பார்த்து,* "**நீர் ஆட்சி உரிமையோடு வரும்போது என்னை நினைவுகூர்ந்தருளும்**" *என்கிறான். அந்தக் கள்வனின் தாழ்ச்சி உள்ள ஜெபத்திற்கு சிலுவையில் தொங்கும்போது கூட ஆண்டவர் பதில் கொடுக்கிறார் (லூக்கா. 23:39-43).*

*கிறீஸ்துவுக்குள் பிரியமான சகோதர சகோதரிகளே! நாம் ஜெபிக்கும்போது, எப்படிப்பட்ட வார்த்தைகளைப் பயன் படுத்துகிறோம். நம்முடைய ஜெபம் தாழ்ச்சி உள்ள ஜெபமாக இருக்கிறதா? பலருக்கு நான் ஜெபிக்கிறேன் என்ற பெருமை. நாம் பெற்றுக்கொள்வதெல்லாம் நம்முடைய ஜெபத்தினாலோ அல்லது நம்முடைய நன்மைத்தனத்தினாலோ, நம்முடைய*

செயல்களினாலோ அல்ல. இயேசு நமக்காக சிலுவையில் மரித்ததினாலேயே நாம் தேவ சமூகத்தில் நிற்கிறோம். இயேசு நமக்காக சிலுவையில் சம்பாதித்ததை நாம் அவரிடம் இருந்து பெற்றுக்கொள்கிறோம். அது நம்முடைய ஜெபத்தினாலேயோ, விசுவாசத்தினாலேயோ, செயல்களினாலேயோ அல்ல, தேவனுடைய கிருபையினாலே உண்டாயிற்று. ஆகையினால் ஜெபிக்கும்போது எப்போதும் உங்களைத் தாழ்த்துங்கள்.

-------------

## 21. அறிவிப்பது உங்கள் பணி

**“நான் உருவாக்கிய இந்த மக்கள் என் புகழை எடுத்துரைப்பர்”** *(எசாயா. 43:21). ஆண்டவர் உருவாக்கிய அவருடைய மக்கள் அவருடைய புகழ்ச்சியை மற்றவர்களுக்குச் சொல்வர். ஏன் ஆண்டவர் நம்மை உருவாக்கி இருக்கிறார்? அவருடைய புகழ்ச்சியை சொல்வதற்காக. இந்த பூமியில் உங்களுக்கு என்ன வேலை? ஆண்டவரின் புகழ்ச்சியைச் சொல்ல வேண்டும். இதைத்தான் பேதுரு சொல்கிறார்:* **“ஆனால் நீங்கள் தேர்ந் தெடுக்கப்பட்ட வழிமரபினர். அரச குருக்களின் கூட்டத்தினர். தூய மக்களினத்தினர்; அவரது உரிமைச் சொத்தான மக்கள். எனவே உங்களை இருளினின்று தமது வியத்தகு ஒளிக்கு அழைத்துள் ளவரின் மேன்மை மிக்க செயல்களை அறிவிப்பது உங்கள் பணி”** *(1 பேதுரு. 2:9). ஆண்டவருடைய மேன்மை மிக்க செயல் களை மற்றவர்களுக்கு அறிவிப்பதே உங்கள் பணி.*

*வானத்திலே வானதூதர்களாய் இருந்தவர்கள் பிசாசுகளாக தள்ளப்பட்டார்கள். அதற்கு என்ன காரணம்? தேவனுக்கு ஊழியம் செய்ய மனமில்லாமல் போனதுதான். அதனால்தான் அவர்கள் கீழே தள்ளப்பட்டார்கள். ஆண்டவரின் புகழ்ச்சியை அறிவிப்பதற்குத் தங்களைத் தாழ்த்தவில்லை. எனவேதான் பிசாசாக மாறிப் போனார்கள். இன்றும் கூட பல கிறீஸ்தவர்கள் ஜெபிப்பார்கள். விவிலியம் வாசிப்பார்கள். ஆண்டவரிடம் தேவையானதனைத்தையும் கேட்பார்கள். ஆனால் கடவுளுக்கு ஊழியம் செய்ய வேண்டும் என்றால் ஓடி விடு வார்கள். இதைத்தான் பிசாசு செய்தது. யார் அப்படி ஊழியம் செய்யாமல் இருக்கின்றார்களோ அவர்கள் பிசாசாக இருக் கிறார்கள். தேவனுக்கு ஊழியம் செய்வதை பிசாசு விரும்பாது. ஆனால் கடவுள் மனிதனை தேவனுடைய புகழ்ச்சியை மற்றவர் களுக்கு சொல்வதற்காகவே உண்டாக்கினார். தேவனுக்கு ஊழியம் செய்வதற்காக மனிதர்களை உண்டாக்கினார்.*

இரண்டு அரசாட்சிகள் இருக்கின்றன. ஒன்று தேவனுடைய அரசாட்சி; இன்னொன்று பிசாசின் அரசாட்சி. தேவனுடைய அரசாட்சி ஒளியின் ஆட்சி. மற்றது இருளின் ஆட்சி. இந்த இரண்டு அரசாட்சிகளுக்கும் இடையில் யுத்தம் நடக்கிறது. அதிலே தேவனுடைய அரசாட்சிக்கு வேலை செய்வதற்குத்தான் தேவன் தம்முடைய பிள்ளைகளை உருவாக்கியிருக்கிறார். எந்த மனிதன் தேவனுக்கு ஊழியம் செய்யவில்லையோ, அவனைப் பசாசு ஆட்கொண்டு தன்னுடைய பணியைச் செய்ய வைக்கிறான்.

இன்றைக்கு நிறைய கிறீஸ்தவர்கள், ஆலயத்திற்குப் போனால் போதும், ஜெபம் செய்தால் போதும், கொஞ்ச நேரம் விவிலியம் வாசித்தால் போதும், நல்ல கிறீஸ்தவர்கள் என்று நினைத்துக்கொண்டு இருக்கிறார்கள். அது சரியான கிறீஸ்தவ வாழ்க்கை அல்ல. **‘‘நான் உருவாக்கிய இந்த மக்கள் என் புகழ்ச்சியை அறிவிப்பார்கள்’’** (எசாயா. 43:21) என்று ஆண்டவர் சொல்கிறார். ஆண்டவருடைய மேன்மை மிக்க செயல்களை அறிவிப்பதுதான் உங்கள் பணி (1பேதுரு. 2:9).

திருச்சபையில் உள்ள ஒவ்வொரு பொது நிலையினருக்கும் பேதுரு இவ்வாறு எழுதுகிறார்: **‘‘உங்களை இருளினின்று தமது வியத்தகு ஒளிக்கு அழைத்துள்ளவரின் மேன்மை மிக்க செயல் களை அறிவிப்பது உங்கள் பணி’’** (1 பேதுரு. 2:9). இந்தப் பணி ஊழியர்களுக்கு மட்டுமோ, குருக்கள், கன்னியர்களுக்கு மட்டுமோ உரியது இல்லை. ஒவ்வொரு கிறீஸ்தவர்களுக்கும் உரிய பணி. தேவனால் உருவாக்கப்பட்டவர்கள் ஒவ்வொரு வரும் தேவனுக்குப் பணி செய்ய வேண்டும்.

ஜெபக்கூட்டத்தில் அற்புதங்கள் நடக்கும்போது, அதற்கும், அங்குள்ள ஊழியர்களுக்கும் தொடர்பு கிடையாது. தேவனே அந்த அற்புதங்களைச் செய்கிறார். ஏன் செய்கிறார்? அவருடைய மகிமைக்காகச் செய்கிறார். அவரின் புகழ்ச்சியை

நாம் மற்றவர்களுக்குச் சொல்ல வேண்டும். தேவன் செய்த அந்த மேன்மையான செயல்களை மற்றவர்களுக்கு எடுத் துரைக்க வேண்டும். நாம் ஆண்டவருக்கு ஊழியம் செய்தாக வேண்டும். பிசாசு ஊழியம் செய்யாது. இன்றும் அது கடவு ளுடைய ஊழியத்திற்கு எதிராகச் செயல்படுகிறது. தேவனுடைய மகிமைக்கு எதிராகவே அது செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. எங்கெல்லாம் மக்கள் தேவனைத் துதிக்கிறார்களோ, புகழ்கிறார்களோ, உயர்த்துகிறார்களோ, அங்கெல்லாம் பிசாசு அலறுகிறது. தன்னுடைய தோல்வி யினால் கதறிக் கதறி அழுகிறது. ஆகையினால் ஒவ்வொரு தேவனுடைய பிள்ளையும் செய்ய வேண்டிய வேலை என்ன? ஆண்டவரின் புகழ்ச்சியை மற்றவர்களுக்கு எடுத்துரைப்பதே. இதைச் சொல்லாமல் போனதினால்தான் பலருடைய வாழ்க்கையில் ஆசீர்வாதங்கள் இல்லை. சில சாபங்கள் அவர்களுடைய வாழ்க்கையில் இருக்கின்றன.

-----------

## 22. சாபங்கள் ஏன் வருகிறது?

*இணைச்சட்டம் 28:45-47ல்,* "**இந்தச் சாபங்கள் அனைத்தும் உன்னைத் துரத்தி வந்து பிடித்து, நீ அழியுமட்டும் உன்னை வதைக்கும். ஏனெனில், நான் உனக்குக் கட்டளையிட்ட அவர்தம் கட்டளைகளையும், நியமங்களையும் நீ கடைப்பிடிக்கவில்லை; உன் கடவுளாகிய ஆண்டவரின் குரலுக்குச் செவி கொடுக்கவுமில்லை. இச்சாபங்கள் உனக்கும், உன் வழி மரபினருக்கும் அடையாளமாகவும், வியத்தகு செயலாகவும் என்றும் இருக்கும். எல்லா நலன்களும் நிறைந்திருக்கையில், நீ உன் கடவுளாகிய ஆண்டவருக்கு மன மகிழ்வோடும், இதயக் களிப்போடும் ஊழியம் செய்யவில்லை.**" *தேவனுக்கு மன மகிழ்ச்சியோடு ஊழியம் செய்வதற்கு ஒவ்வொரு கிறிஸ்தவனுக்கும் கடமை உண்டு. ஒவ்வொருவரையும் தேவன் அழைத்திருக்கிறார். எல்லாரும் ஒரே மாதிரி ஊழியம் செய்ய முடியாது. உங்கள் சூழ்நிலைக்கு ஏற்ப, வசதிக்கு ஏற்ப, தேவனுடைய மகிமையை மற்றவர்களுக்கு எடுத்துச் சொல்லுங்கள். ஆனால் ஊழியத்தை மனமகிழ்ச்சியோடும், இதயக் களிப்போடும் செய்யுங்கள். இப்படிச் செய்யாமல் போனதாலே இந்த சாபங்கள் உனக்கும் உன் சந்ததிக்கும் அடையாளமாக ஒரு அற்புத செயலாகத் தொடர்ந்து இருக்கும். அற்புதச் செயல் என்றால் எவ்வளவு முயற்சி செய்தாலும் அவர்களை அந்த சாபங்கள் வெளியே வர விடாது. கிறிஸ்தவர்கள் பலருடைய வாழ்க்கையில் இந்தச் சாபங்கள் இன்றும் இருக்கின்றன. இந்தச் சாபங்களில் இருந்து அவர்கள் இன்னும் வெளியே வராமலே இருக்கிறார்கள்.*

*கிறிஸ்துவுக்குள் பிரியமான சகோதர சகோதரிகளே, உங்கள் வாழ்க்கையில், உங்கள் வீட்டில் இந்தச் சாபங்கள் இருக்குமானால், இப்போதே மனம் மாறுங்கள். தேவனுக்கு ஊழியம் செய்வோம் என்று ஒப்புக்கொடுங்கள். உங்களால் முடிந்த வரை தேவனுடைய புகழ்ச்சியை மற்றவர்களுக்குச்*

சொல்வேன் என்று தீர்மானம் செய்யுங்கள். அந்தச் சாபங்கள் உங்களை விட்டு விலகும். அவர் உங்களை உருவாக்கியதன் நோக்கமே அவருடைய புகழ்ச்சியைச் சொல்வதற்குத்தான். கடவுளுடைய புகழ்ச்சியை அறிவிப்பதற்குத்தான் உங்களை உருவாக்கினார். இந்தப் பூமியில் உங்களுக்கு ஜீவனைக் கொடுத் திருக்கிறார் என்றால், ஆண்டவரை உயர்த்துவதற்குத்தான். அந்தப் பணியை தாழ்ச்சியோடு செய்யாமல் போகிறபோது சாபம்.

தாழ்ச்சி உள்ளவர்கள் அந்தப் பணியை மகிழ்ச்சியோடு பாக்கியமாக நினைத்துச் செய்வார்கள். ஆணவம் பிடித்தவர் களால் அதைச் செய்ய முடியாது. மற்றவர்கள் என்ன நினைப் பார்கள்? நம்முடைய அந்தஸ்து போய்விடுமே? அடுத்தவர்கள் நம்மை ஒரு மாதிரி நினைப்பார்களே? என்று பணியை செய்யாமல் போய்விடுவார்கள். பெருமை கடவுளுக்கு ஊழியம் செய்ய விடாது. தாழ்ச்சியோ, மனமகிழ்ச்சியோடும், இதயக் களிப்போடும் தேவனுக்கு ஊழியம் புரியும்.

-------------

## 23. பரலோக மகிமையில் வேறுபாடுகள்

*பரலோகத்திற்கு நீங்கள் செல்லும்போது, அங்கு பல வேறு பாடுகள் இருக்கும். பலர் நினைப்பது போல் அங்கு எல்லாருக் கும் ஒரே மாதிரி இருக்காது. அங்கு வேறுபாடுகள் உண்டு. என்ன வேறுபாடுகள்? மகிமையில் வேறுபாடுகள் உண்டு. வானத்தில் ஒளி கொடுப்பவை பல உள்ளன. சூரியன், நிலா, நட்சத்திரங்கள் போன்றவை ஒளி கொடுக்கின்றன. ஆனால் எல்லா வெளிச்சமும் ஒரே மாதிரி இருப்பதில்லை. ஒன்று அதிகமாகவும், மற்றது குறைவாகவும் இருக்கின்றது. அதே போலத்தான் பரலோகத்திலும் வேறுபாடுகள் காணப்படும். அனைவருக்கும் மகிழ்ச்சி ஒரே மாதிரி இருக்கும். ஆனால் வாழ்க்கை முறை ஒரே மாதிரியாக இருப்பதில்லை.*

**''நான் செயலாற்றும் அந்நாளில் அவர்கள் எனது தனிப் பெரும் சொத்தாக இருப்பார்கள்''** *(மலாக்கி. 3:17) என்கிறார் படைகளின் ஆண்டவர். ஒரு தந்தை தமக்குப் பணிவிடை செய்யும் மகன் மீது கருணை காட்டுவது போல நான் அவர்கள் மீது கருணை காட்டுவேன். கடவுளுக்கு ஊழியம் செய்து அவரின் புகழ்ச்சியை எடுத்துரைப்பவர்கள்* **''எனது தனிப் பெரும் சொத்தாக இருப்பார்கள்''** *என்கிறார் ஆண்டவர். இந்த உலகத்தில் வாழ்க்கை எழுபது அல்லது எண்பது வருடம். இதில் மற்றவர்கள் என்ன சொல்வார்கள் என்று நினைத்தால், நித்திய நித்தியமாக வாழப் போகிற அந்த மேன்மையான காரியங் களை இழந்து விடுவோம். இந்த பூமியில் எந்த நிலையில் இருந் தாலும், தேவனுடைய புகழ்ச்சியை மற்றவர்களுக்குச் சொல்ல வேண்டும். ஆண்டவரின் மேன்மையான செயல்களை மற்றவர் களுக்குச் சொல்ல வேண்டும். தந்தை தான் நேசிக்கும் மகன் மீது எப்படி இரக்கம் காட்டுவாரோ, அப்படி இரக்கம் காட்டுவேன் என்கிறார். தேவனுடைய ராஜ்யத்திற்காக உழைக்கிறவர்கள் மேல் இரக்கம் காட்டுவார்.*

**“அப்போது நீங்கள் நேர்மையாளருக்கும்,கொடியோருக்கும், கடவுளுக்கு ஊழியம் செய்வோருக்கும், அவருக்கு ஊழியம் செய்யாதோருக்கும் உள்ள வேற்றுமையை மீண்டும் கண்டுகொள்வீர்கள்”** *(மலாக்கி. 3:18). அப்போது நீங்கள் வேதனைப் படுவீர்கள். ஐயோ! இந்த வாழ்வை வீணாக்கி விட்டேனே; இந்த மேன்மையான வாழ்வை இழந்து விட்டேனே! என்று வேதனைப்படுவீர்கள். அதனால் இந்தப் பூமியில் கொடுக்கப் பட்டிருக்கிற கொஞ்ச நாளில், மனத் தாழ்மை உள்ளவர்களாய், தேவனின் மகிமையைப் பறைசாற்றுங்கள். ஏனென்றால் இயேசு இன்றும் உயிரோடு இருக்கிறார் என்பதைத் தாழ்மை உள்ள வர்கள் மட்டும்தான் சொல்ல முடியும். தாழ்மை இல்லாதவர் களால் இதைச் சொல்ல முடியாது. ஏனென்றால் பெருமை. அடுத்தவர்கள் என்ன நினைத்துக்கொள்வார்களோ என்ற அகந்தை.*

**“கடவுள் ஒருவரே. அவர் தரும் பெருமையை நாடாது, ஒருவர் மற்றவரிடமிருந்து பெருமையைத் தேடிக்கொள்கிறீர்களே!”** *உங்களால் எப்படி என்னை நம்ப இயலும்? (யோவான். 5:44). தேவனுக்கு ஊழியம் செய்யாமல் தேவனை விசுவசிக்க முடியாது. ஆண்டவரை விசுவசித்தால் கட்டாயம் அவருடைய மேன்மையைச் சொல்லுவோம். அதுதான் விசுவாசம். ஆனால் கடவுள் தரும் அந்தப் பெருமையை வேண்டாம் என்று சொல்லி மனிதர் தரும் பெருமையைத் தேடினால் எப்படி தேவனை விசுவசிக்க முடியும்? முடியாது.*

------------

## 24. உன் வாயினின்று அகற்றாதே!

**''தாமாகப் பேசுபவர் தமக்கே பெருமை தேடிக்கொள்கிறார். தம்மை அனுப்பியவருடைய பெருமையைத் தேடுபவர் உண்மையுள்ளவர். அவரிடத்தில் பொய்மை இல்லை''** *(யோவான் 7:18). தானாகப் பேசுகிறவன் தன்னுடைய புத்தியில் இருந்து, தன்னுடைய அறிவில் இருந்து பேசுகிறவன், தனக்கே பெருமையைத் தேடிக்கொள்கிறான். தேவனுடைய வார்த்தையில் பேசுகிறவனோ, தேவனுக்குப் பெருமையைத் தேடுகிறான். இன்றைக்கு நிறையப் பிரச்சினைகள் உங்கள் வாழ்வில் அனுபவிக்கக் காரணம், இந்தப் பெருமைதான். தானாகப் பேசுவது. தேவனுடைய வார்த்தையைப் பேச வேண்டியவர்கள், தங்களுடைய சொந்த வார்த்தையைப் பேசுகிறார்கள். அதனால்தான் பிரச்சினை. இதைத்தான் யோசுவாவில் ஆண்டவர் கூறுகிறார்:* **''இந்தத் திருச்சட்ட நூலை உன் முன்னின்று அகற்றாதே''** *(யோசுவா. 1:8). ஆங்கில மொழிபெயர்ப்பில்,* **''உன் வாயினின்று அகற்றாதே''** *என்று எழுதப்பட்டிருக்கிறது. எபிரேய மொழியிலும் இவ்வாறுதான் எழுதப்பட்டுள்ளது. அப்படி என்றால் என்ன? நீ பேசும்போது உன் வார்த்தைகள் எல்லாம், வேத வசனத்தில் இருந்து வர வேண்டும். வேறு ஒரு வார்த்தையைப் பேசி விடாதே. ஏனென்றால், உன் வாழ்வின் ஆசீர்வாதங்கள் எல்லாம் அதில்தான் இருக்கிறது.*

### வார்த்தையில் ஆசீர்வாதங்களும், சாபங்களும்

**''வாழ்வதும் நாவாலே, சாவாதும் நாவாலே''** *(நீதிமொழிகள் 18:21). உன் வாழ்வின் ஆசீர்வாதங்களும், சாபங்களும் உன் வாயில்தான் உள்ளது. அதாவது, இந்த இரண்டும் உன் வாயில் இருந்து வரக்கூடிய வார்த்தையில்தான் உள்ளது. அதனால்தான் சொல்கிறார்:* **''இந்தத் திருச்சட்ட நூலை உன்**

**வாயினின்று அகற்றாதே.**" *நீ பேசும்போது தேவனுடைய வார்த்தையைக் கொண்டு பேசு. அதைப் பேசப் பேச உன் வாழ்வு ஆசீர்வாதமாக மாறும். அதற்கு எதிரான வேறு ஒன்றை நீ பேசும்போது, அந்த ஆசீர்வாதங்கள் உன் வாழ்வை விட்டு விலகிப் போய் விடுகிறது. இன்றைக்கு நிறையக் கிறீஸ்தவர்கள் இறை வார்த்தையைப் பேசுவதற்குப் பதிலாகத் தாமாகவே பல எதிர்மறையான வார்த்தைகளைப் பேசி விடுகிறார்கள். அப்படிப் பேசுவதினால்தான் நிறைய ஆசீர்வாதங்கள் அவர்களுடைய வாழ்க்கையில் வராமல் தள்ளிப் போய்விடுகின்றன.*

*தேவனுடைய வார்த்தை ஒவ்வொன்றும் உங்களை ஆசீர்வதிக்க வல்லது. இந்த வார்த்தைகள் ஒவ்வொன்றுமே விசுவாச வார்த்தையாக இருக்கிறது. இன்றைக்கு இந்த விசுவாச வார்த்தைகளை விட்டுவிட்டு, நீங்கள் வேறு ஒன்றைப் பேசும்போதுதான், நீங்கள் மாட்டிக்கொள்கிறீர்கள். உங்கள் வாயினாலே நீங்கள் மாட்டிக்கொள்கிறீர்கள். அப்படிப் பேசுகிறவர்கள் தான் தங்கள் பிள்ளைகளைப் பார்த்து, "ஐயோ சனியன், உயிரை வாங்க பிறந்திருக்கிறது" என்று சொல்லி விடுகிறார்கள். பின் அந்தக் குழந்தை என்ன செய்யும்? உயிரை வாங்கும். சிலர் "நான் சாவதே நல்லது" என்று சொல்கிறார்கள். பின் வியாதி வந்து விடுகிறது. வீட்டில் கணவனுக்கும் மனைவிக்கும் சண்டை; சாபம் போடுகிறார்கள். பின்பு அதை அனுபவிக்கப் போகிறது யார்? நீதான். விவிலியம் உன்னை சபிக்கச் சொல்லவில்லை. ஆசீர்வதிக்கக் கற்றுத் தருகிறது.*

*அதனால்தான் இந்த வார்த்தையை உன் வாயில் இருந்து அகல விடாதே என்று சொல்கிறார். தானாகவே பேசுகிறவன் தன்னுடைய பெருமையைத் தேடுகிறான். இப்படித் தானாகவே பேசும்போதுதான் சாபம் விட்டு விடுகிறாய்.*

விவிலியம் உன்னை சாபம் விடச் சொல்லவில்லை. தானாகவே பேசுவதினால்தான் இன்றைக்கு நிறையப் பிரச்சினைகள். நிறைய தீய வார்த்தைகளைப் பேசுகிறாய். தேவனுடைய வார்த்தைகள் ஆசீர்வாதங்களைக் கொடுக்கிற வார்த்தைகள். ஆனால் இன்று வேறு வார்த்தைகளைப் பேசுவதால் பல தீமைகள், பல பிரச்சினைகள், பல வியாதிகள் வாழ்க்கையில் வந்துகொண்டேயிருக்கிறது. சில ஆசீர் வாதங்கள் தடைபட்டு நின்றுகொண்டேயிருக்கின்றன.

### கோலியாத்தை ஜெயிக்கும் விசுவாச வார்த்தை

நம் தேவன் ஆசீர்வதிக்கிற தேவனாக இருக்கிறார். அந்த ஆசீர்வாதங்களை நீங்கள் உங்கள் வாயினால், நீங்கள் பேசுகிற வார்த்தையினாலே பெற முடியும். உங்களுக்கு வருகிற சாபங்களையும் நீங்கள் பேசுகிற வார்த்தை யினாலேதான் பெற முடியும். அனுபவிக்க முடியும். ஒரு கோலியாத் எழும்பும்போது எல்லா இஸ்ரவேலரும் பயந் தனர். சவுல் அரசனும் பயந்து விடுகிறான். பயந்து தாவீதைப் பார்த்து, ‘‘நீ சிறு பையனாக இருக்கிறாய். உன்னால் அவ்வளவு பெரிய கோலியாத்தை ஜெயிக்க முடியாது’’ என்கிறான். ஆனால் தாவீது, ‘‘ஆண்டவர் என்னோடு இருக்கிறதால், இந்த கோலியாத்தை எளிதாக ஜெயிப்பேன்’’ என்கிறார்.

சவுல் போர்ப் பயிற்சி பெற்றவன். அரசனாக அபிஷேகம் பண்ணப்பட்டவன். போர் செய்வதற்காகவே அபிஷேகம் பண்ணப்பட்டவன். தாவீது அப்படி அல்ல. சாதாரண ஆடு மேய்ப்பவர். ஆனால் இரண்டு பேரும் பேசுகின்ற வார்த்தை களைக் கவனியுங்கள். சவுல் பேசுகிற வார்த்தைகளாலேயே அவரால் கோலியாத்தை எதிர்கொள்ள முடியவில்லை. யாரெல்லாம் இப்படிப் பேசுகிறீர்களோ, அவர்கள் எல்லோரும் தங்கள் பிரச்சினைகளைக் கண்டு பயந்து

கொண்டேயிருப்பீர்கள். ஆனால் தாவீது பேசிய வார்த்தைகள், தேவன் என்னோடு இருக்கிறார் என்பவை யாகும். நான் எல்லாம் வல்லவராகிய தேவனுடைய பெயரால் வந்திருக்கிறேன். ஆகையினால் நான் கோலியாத்தை எளிதாக மேற்கொள்வேன் என்று சொன்னார். தாவீது கோலியாத்தை ஜெயித்தார்.

கிறிஸ்துவுக்குள் பிரியமான சகோதர சகோதரிகளே, உங்கள் பிரச்சினைகள் கோலியாத்தைப் போலப் பெரிதாக இருக்கலாம். ஆனால் உங்கள் வாயின் வார்த்தைகள், உங்கள் பிரச்சினைகளை மேற்கொள்ள வைக்கும், அல்லது பிரச்சினை உங்களை மேற்கொள்ள வைக்கும். ஆகையால்தான் தாமாகவே பேசுகிறவன் சொந்த மகிமையைத் தேடுகிறான். சொந்தப் பெருமையைத் தேடுகிறான். எப்பொழுதெல்லாம் நீங்களாக தேவன் மீது விசுவாசம் இல்லாமல், தேவனுடைய வார்த்தை யைப் பேசாமல், அகங்காரமாக உங்களுடைய வார்த்தையைப் பேசுகிறீர்களோ, அப்போதுதான் நீங்கள் தாழ்த்தப்படு கிறீர்கள். பிரச்சினைகள், வியாதிகள், சூழ்நிலைகள் உங்களை மேற்கொள்கின்றன. நீங்கள் பிரச்சினைகளுக்குக் கீழே போய் விடுகிறீர்கள். ஆனால் எப்பொழுதெல்லாம் நீங்கள் தேவனுடைய வார்த்தையைப் பேச ஆரம்பிக்கின்றீர்களோ, அப்போது உங்கள் பிரச்சினைகளுக்கு மேலாக உங்களைத் தேவன் கொண்டு போவார்.

மூன்று வாலிபர்களைப் பொற்சிலையை வணங்கும்படி அரசன் கட்டாயப்படுத்துகிறான். வணங்காவிட்டால் எரியும் நெருப்புச் சூளையில் போட்டு விடுவேன் என்று சொல்கிறான். அந்த மூன்று வாலிபர்கள் என்ன சொன்னார்கள்? **"இந்த நெருப்புச் சூளையில் இருந்தும், ராஜாவின் கையில் இருந்தும் எங்களைத் தப்புவிக்க எங்கள் ஆண்டவர் வல்லவர்"** என்று சொன்னார்கள் (தானியேல் 3:17-18).

*இன்று பலர் தேவனுடைய வார்த்தைகளைப் பேசுவதற்குப் பதிலாக, "ஐயோ! நான் என்ன செய்வேன்!" என்ற வேறு வார்த்தைகளைப் பேசுகிறார்கள். நீ ஒன்றும் செய்ய வேண்டாம். அந்த மூன்று வாலிபர்களும் நெருப்பில் இருந்து தாங்களாகவே தப்பித்து வரவில்லை. ராஜாவுடன் போர் செய்யவுமில்லை. ஆனால் அவர்கள் தேவனுடைய வார்த்தைகளைப் பேசினார்கள். அதனால்தான் இந்த திருச்சட்ட நூலை, வார்த்தையை, உன் வாயினின்று அகற்றாதே என்று சொல்கிறார்;* **நீ எதையாவது பார்த்து, பயந்து தானாகப் பேசாதே.** *அதற்குப் பதிலாக உன் வாழ்க்கையில் ஏதாவது பயம் வந்தால், நீ செய்ய வேண்டியது என்ன? தேவனுடைய வார்த்தையை எடுத்துப் பேசு. அதுதான் தாழ்ச்சி. அதில்தான் வெற்றி!*

## தேவனுடைய வார்த்தைகளைப் பேசுங்கள்

*தாழ்மை உள்ளவர்கள் தேவனுடைய வார்த்தைகளைப் பேசுகிறார்கள். அகங்காரிகள் தங்கள் அறிவைக் கொண்டு, தங்கள் சொந்த வார்த்தையைப் பேசுகிறார்கள். தாழ்மை உள்ளவர்களை தேவன் உயர்த்துகிறார். தம்மைத் தாமே தாழ்த்துகிறவர் எவரும் உயர்த்தப்பெறுவர். தம்மைத் தாமே உயர்த்துகிறவர் எவரும் தாழ்த்தப்பெறுவர். இன்றைக்கு சிந்தித்துப் பாருங்கள். எத்தனை நேரங்கள் தாழ்ச்சி இல்லாமல் நம்முடைய சொந்த வார்த்தைகளைப் பேசி பிரச்சினைகளில் மாட்டிக்கொள்கிறோம். இப்படிப் பேசுகிறதினால்தான் பல பிரச்சினைகள் விலகாமல் அப்படியே இருக்கிறது. தேவனுடைய வார்த்தை உங்கள் சூழ்நிலைகளுக்கு எதிராக இருக்கலாம். இதைத்தான் இயேசு சொல்கிறார்:* **"பிதா எதைச் சொல்லக் காண்கின்றேனோ, அதையே நான் பேசுகிறேன்"** *(யோவான் 12:49). யாயீர் மகள் இறந்து விட்டாள். இயேசு அங்கே போகிறார். அங்கிருந்த அனைவரும் அழுகிறார்கள்.*

*இயேசு என்ன பேசுகிறார்?* **"சிறுமி சாகவில்லை"** *என்கிறார். எல்லாரும் சிறுமி இறந்ததை நினைத்து அழுதுகொண் டிருக்கிறார்கள். அவ்வளவு தான், செத்துப் போய்விட்டாள். இனி ஒன்றும் செய்ய முடியாது என்கிறார்கள். இயேசு அங்கிருந்தவர்கள் பேசியதைக் கண்டுகொள்ளவில்லை. அங்கிருந்தவர்கள் பேசியதைப் பேசவில்லை, சூழ்நிலையைப் பார்க்கவில்லை, பிதா சொல்வதைப் பார்த்து சிறுமி சாக வில்லை என்று தேவனுடைய வார்த்தையைப் பேசுகிறார்.*

*கிறீஸ்துவுக்குள் பிரியமான சகோதர சகோதரிகளே, ஒரு வேளை உங்கள் வாழ்க்கை உங்கள் பார்வையில் தோல்வி அடைந்துகொண்டிருக்கலாம். ஆனால் விவிலியம் சொல்கிறது:* **"இயேசுவினிடத்தில் விசுவாசம் கொள்கிறவர்கள் இந்த உலகத்தை ஜெயிக்கிறார்கள்"** *(1 யோவான் 5:5). எனவே, நீ பேசுகிற வார்த்தைகளை மாற்று. தேவனுடைய வார்த்தை களைப் பேசு. தேவன் உன்னை உருவாக்கியது தோல்வி அடை வதற்காக அல்ல. இயேசு கிறீஸ்துவின் வெற்றியில் பங்குகொள் வதற்காக உன்னை அழைத்திருக்கிறார் (2 கொரி. 2:14). எப்படிப் பங்கு கொள்ள முடியும்? தாழ்மையோடு கடவு ளுடைய வார்த்தைகளைப் பேசுவதன் மூலம் பங்கு கொள்ள முடியும்.*

*சிறுமி இறந்து விட்டாள் என்று அனைவரும் சொன் னார்கள். ஆனால் இயேசு சிறுமி சாகவில்லை என்று பிதா சொன்னதையே சொல்கிறார். உடனே அங்கிருந்த அனைவரும் சிரித்தார்கள். விவிலியம் சொல்கிறது, இயேசுவை அவர்கள் ஏளனம் பண்ணினார்கள். அந்த ஜனங்கள் சொன்னதைக் குறித்து இயேசு கவலைப்படவில்லை. தேவனுடைய வார்த் தைகளையே அவர் எப்போதும் வாயில் வைத்திருந்தார். உன் பிரச்சினைகள் மாற வேண்டுமானால், அடுத்தவர்கள் என்ன சொல்லிக் கொண்டிருக்கிறார்கள் என்று பார்க்காதே.*

தேவனுடைய வார்த்தையைப் பேசு. அங்கே அற்புதங்கள் நடக்கும், அதிசயங்கள் நடக்கும், சூழ்நிலைகள் மாறும், வியாதிகள் சுகமாகும், பிரச்சினைகளை நீ மேற்கொள்வாய், வெற்றி உண்டு, தோல்வி இல்லை. தேவன் உனக்கு எல்லாவற்றையும் ஜெயமாக மாற்றுவார். நம்முடைய தேவன் ஜீவனுள்ள தேவன். அவருடைய வார்த்தை உயிருள்ளது. அந்த வார்த்தைகள்தான் நம் வாயில் வர வேண்டும். அந்த வார்த்தைகளைத் தான் நீ பேச வேண்டும்.

இன்றைக்கு தேவனுடைய வார்த்தையை விட்டுவிட்டு வேறு வார்த்தைகளைப் பேசுவதினால்தான் குடும்பத்தில் மாற்றங்கள் இல்லை, ஆசீர்வாதங்கள் இல்லை. சூழ்நிலைகள் வேறு விதமாக இருக்கலாம். அதைக் குறித்து நாம் கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லை. மாறவே முடியாத ஒரு சூழ்நிலையாக இருக்கலாம். ஆனால் தேவன் மாற்ற வல்லவர் ஆனால் நாம் பேசுகிற வார்த்தை என்ன? சிந்தியுங்கள்.

## விசுவாச வார்த்தைகளைப் பேசுங்கள்

எனக்குத் தெரிந்த சகோதரர் ஒருவர் இருக்கிறார். அவரின் மனைவி இந்து குடும்பத்தைச் சேர்ந்தவர். அந்த சகோதரனுக்கு தான் தெரிந்துகொண்ட இயேசுவைத் தன் மாமனாரும், மாமியாரும் அறிந்துகொள்ள வேண்டும் என்று விருப்பம். அவர்களும் பரலோகத்திற்கு வர வேண்டும் என்று ஆசைப்பட்டார். அவர்கள் இருந்த ஊர் மிகவும் பாரம்பரியம் மிக்க ஒரு ஊர். அங்கே ஒருவர் கூட கிறிஸ்துவை அறிந்தவர்கள் இல்லை. ஆகையால் அந்தச் சகோதரர் என்னைத் தன் மாமனாரின் ஊருக்கு அழைத்துச் சென்றார். நாங்கள் அங்கு சென்று ஒரு இரண்டு மணி நேரம் இயேசு கிறிஸ்துவைக் குறித்துப் பேசினோம். இவ்வாறு பேசி முடித்த பிறகு, அவர்கள் எங்களிடம்,

"இயேசு மட்டும்தான் ஒரே தெய்வம் என்று எங்களால் ஏற்றுக்கொள்ள முடியாது. இயேசுவும் ஒரு தெய்வம்" என்று கூறினார்கள். அதற்கு மேல் பேசுவதற்கு ஒன்றுமில்லை. பிறகு நாங்கள் விசுவாச வார்த்தைகள் பேச ஆரம்பித்தோம். அவர்களைப் பார்த்து நான் சொன்னேன்: "இந்த ஊரில் முதலாவதாக நீங்கள்தான் இயேசுகிறீஸ்துவை ஏற்றுக் கொள்ளப் போகிறீர்கள்." அவர்கள் அந்த வார்த்தையை எதிர்பார்க்கவில்லை. நான் மீண்டும் அந்த வார்த்தைகளைச் சொன்னேன். சொல்லி விட்டு ஒரு ஜெபம் செய்துவிட்டு நாங்கள் கிளம்பி விட்டோம். பிறகு மறுநாள் அவர்கள் எனக்கு போன் செய்து, "ஜெபம் செய்வதற்கு எங்களுக்கு ஒரு ஜெபப் புத்தகம் கூட தரவில்லையே?" என்றார்கள். பின் அங்கு இருந்த கான்வென்டில் சில ஜெபப் புத்தகங்கள் வாங்கி அவர்களுக்குக் கொடுத்து அனுப்பினேன். அதன் பிறகு மூன்று மாதங்களில் அவர்கள் மனம் மாறி கிறீஸ்து வுக்குள்ளாக ஞானஸ்நானம் பெற்றார்கள்.

நீ வாழ்ந்த சூழ்நிலைகள் எதுவாக இருந்தாலும், அதைப் பார்த்துப் பயப்படாதே! சோர்ந்து போகாதே! ஆனால் தேவ னுடைய வார்த்தைகளைப் பேசு. அந்த வார்த்தை கிரியை செய்யும். அந்த வார்த்தை விடுதலையைக் கொண்டு வரும். அந்த வார்த்தை வியாதியைச் சுகமாக்கும். அந்த வார்த்தை பிரச்சினைகளை மாறப் பண்ணும். அந்த வார்த்தை பாவங் களை மேற்கொள்ளும். அந்த வார்த்தை பிசாசுகளை உன் வாழ்க்கையில் இருந்து துரத்தி விடும். அதனால்தான் ஆண்டவர் சொல்கிறார்: தாமாகவே பேசுகிறவன் தன் சொந்தப் பெருமையைத் தேடுகிறான். ஆகையால் விழுந்து போகிறான். எப்போது இறை வார்த்தையைப் பேசுகிறாயோ, அப்பொழுது நீ விழுந்து போவதில்லை. தேவனுடைய வார்த்தை உன்னைத் தாங்கிப் பிடிக்கும். அதனால்தான் இயேசு சொல்கிறார்: "பிதா சொல்வதையே நானும் சொல்கிறேன்."

*எல்லா நேரங்களிலும் தாழ்ச்சியோடு இருக்கிறேனா என்று உங்கள் உள்ளத்தை ஆராய்ந்து பாருங்கள்! விவிலியம் சொல்கிறது: தங்களைத் தாமே தாழ்த்துகிறவர்களை ஆண்டவர் உயர்த்துகிறார். இன்னும் காலம் தாமதமாகி விடவில்லை. உங்களைத் தாழ்த்துங்கள். மீதி இருக்கும் நாட்களில் தேவன் உங்களை உயர்த்த முடியும். கடந்து போனதை நினைத்துக் கவலைப்படாதீர்கள். இப்போதும் தேவன் உங்களை உயர்த்த சர்வ வல்லவர். அவர் உன் இருதயத்தைப் பார்க்கிறார். தாழ்ச்சி உள்ள இருதயத்தை தேவன் உயர்த்துகிறார். இப்போது உங்களை ஒப்புக் கொடுங்கள். ஆமென்! அல்லேலூயா!!*

--------------